உ

ஸ்ரீராமஜெயம்.





# ப்ரம்ம வித்யா.

மதுரை அத்வைத சபாபண்டிதரான

சாஸ்திர ரத்தினம் தேதியூர்

ப்ரம்மஸ்ரீ

சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்களால்

இயற்றப்பெற்று



மதுரை

ஸ்ரீ ஜெகதாம்பாள் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிடப்பெற்றது

1929.

இதன் விலை] [அணா 8.

உ

ஸ்ரீராமஜெயம்.



# ப்ரம்ம வித்யா.



மதுரை அத்வைத சபாபண்டிதரான
சாஸ்திர ரத்தினம் தேதியூர்
ப்ரம்மஸ்ரீ
சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்களால்
இயற்றப்பெற்று

மதுரை
ஸ்ரீ ஜெகதாம்பாள் அச்சியந்திரசாலையிற்
பதிப்பிடப்பெற்றது.
1929.

இதன் விலை] [அணா 8.

# பகவத்கீதை.

## 1-வது அத்தியாயம்.

சந்திர வம்சத்தில் பரதன் என்று பிரசித்திபெற்ற மஹாராஜனால், ஆளப்பட்டுவந்த ராஜகுலத்தில், விசித்திர வீரியன் என்ற ஓர் அரசன் பிரசித்தனாக இருந்துவந்தான். அந்த அரசனுக்கு திருதராஷ்ட்ரன், பாண்டு விதுரர் என்று மூன்று குமாரர்கள் இருந்தார்கள். முதலாவது குமாரனான திருதராஷ்ட்ரன் என்பவன் பிறப்பிலேயே குருடனாக இருந்த காரணத்தால் ராஜபதிவிக்கு யோக்யனாகவில்லை. அக்காரணத்தால், இரண்டாவது குமாரனான பாண்டு என்ற மஹானுபாவன் தனது தகப்பனான விசித்ரவீரியனால் ஆளப்பட்டுவந்த ராஜ்யத்தை அவனுக்குப் பிறகுதான் பட்டாபிஷேகம் செய்துகொண்டு ராஜாவாக விளங்கிவந்தான். அந்தப்பாண்டுவுக்குக் குந்தி என்ற மனைவியினிடத்தில் யுதிஷ்டிரன், பீமசேனன், அர்ஜ்ஜுனன் என்ற மூன்று குமாரர்களும், மாத்ரி என்ற மனைவியினிடத்தில் நகுலன், சகாதேவன் என்ற இரண்டு குமாரர்களும் ஆக ஐந்து குமாரர்கள் உண்டானார்கள். இந்தக் குமாரர்கள் குழந்தைகளாக இருக்குங்காலத்திலேயே பாண்டு என்ற அரசன் இறந்துவிட்டான். அந்தச்சமயத்தில் திருதராஷ்ட்ரனுக்கும் காந்தாரி என்ற மனைவியினிடத்தில் துர்யோதனன், துச்சாசனன் முதலான குமாரர்கள் உண்டாகி நிரம்பவும் பலிஷ்டர்களாகவும் சூரர்களாகவும் இருந்துவந்தார்கள்.

திருதராஷ்ட்ரன், பாண்டு என்ற தன் தம்பி போனவுடன் தனது குமாரனான துர்யோதனனுக்கு ராஜ்யம் கிடைக்கவேண்டும் என்ற ஆவலுடன் தன் சாமர்த்யத்தால், ராஜ்ய பட்டாபிஷேகத்தையும் செய்து வைத்துத் துர்யோதனன் முதலான குமாரர்களே அரசாளும்படி செய்துவந்தான். தன் தம்பியான பாண்டுவின் குமாரர்களான யுதிஷ்டிரன் முதலான ஐந்து பேர்களிடத்திலும், அசூயையும். த்வேஷத்தையும் வைத்துக்கொண்டு அவர்களுடைய

# பகவத்கீதை.

## 1-வது அத்தியாயம்.

சந்திர வம்சத்தில் பாதன் என்று பிரசித்திபெற்ற மஹா ராஜனால், ஆளப்பட்டுவந்த ராஜகுலத்தில், விசித்திர வீரியன் என்ற ஓர் அரசன் பிரசித்தனாக இருந்துவந்தான். அந்த அரசனுக்கு திருதராஷ்ட்ரன், பாண்டு விதுரர் என்று மூன்று குமாரர்கள் இருந்தார்கள். முதலாவது குமாரனான திருதராஷ்ட்ரன் என்பவன் பிறப்பிலேயே குருடனாக இருந்த காரணத்தால் ராஜபதிவிக்கு யோக்யனாகவில்லை. அக்காரணத்தால், இரண்டாவது குமாரனான பாண்டு என்ற மஹானுபாவன் தனது தகப்பனான விசித்ரவீரியனால் ஆளப்பட்டுவந்த ராஜ்யத்தை அவனுக்குப் பிறகுதான் பட்டாபிஷேகம் செய்துகொண்டு ராஜாவாக விளங்கிவந்தான். அந்தப்பாண்டுவுக்குக் குந்தி என்ற மனைவியினிடத்தில் யுதிஷ்டிரன், பீமசேனன், அர்ஜ்ஜுனன் என்ற மூன்று குமாரர்களும், மாத்ரி என்ற மனைவியினிடத்தில் நகுலன், சகாதேவன் என்ற இரண்டு குமாரர்களும் ஆக ஐந்து குமாரர்கள் உண்டானார்கள். இந்தக் குமாரர்கள் குழந்தைகளாக இருக்குங்காலத்திலேயே பாண்டு என்ற அரசன் இறந்துவிட்டான். அந்தச்சமயத்தில் திருதராஷ்ட்ரனுக்கும் காந்தாரி என்ற மனைவியினிடத்தில் துர்யோதனன், துச்சாசனன் முதலான குமாரர்கள் உண்டாகி நிரம்பவும் பலிஷ்டர்களாகவும் சூரர்களாகவும் இருந்து வந்தார்கள்.

திருதராஷ்ட்ரன், பாண்டு என்ற தன் தம்பி போனவுடன் தனது குமாரனான துர்யோதனனுக்கு ராஜ்யம் கிடைக்கவேண்டும் என்று அவனுடன் தன் சாமர்த்யத்தால், ராஜ்ய பட்டாபிஷேகத்தையும் செய்து வைத்துத் துர்யோதனன் முதலான குமாரர்களே அரசாளும்படி செய்துவந்தான். தன் தம்பியான பாண்டுவின் குமாரர்களான யுதிஷ்டிரன் முதலான ஐந்து பேர்களிடத்திலும், அசூயையும். த்வேஷத்தையும் வைத்துக்கொண்டு அவர்களுடைய

ஜீவனத்தை மிகவும் துக்க ஜீவனமாகவும் செய்துவந்தான். பாண்டுவின் குமாரர்களான யுதிஷ்டிரன் முதலான ஐந்துபேர்களுடைய தாயாரான குந்திதேவியோ மதுராபுரியில் வசித்து வந்தவராயும், பகவானுன ஸ்ரீ கிருஷ்ணனுக்குத் தகப்பனாராயும் விளங்கி வந்த வசுதேவருடைய சஹோதரியாவாள். அந்த சம்பந்த நிமித்தமாக பகவானுன ஸ்ரீ கிருஷ்ணனுக்கு யுதிஷ்டிரன் முதலானவர்களிடம் மிகவும் பிரேமையும், பிரீதியும் எற்பட்டது. திருதராஷ்டிரன் இந்தப் பாண்டு குமாரர்களுக்குச் செய்கிற ஹிம்சையைப் பகவானும் அறிந்து அதிக வியசனம் உள்ளவராகவே இருந்தார். அநேக வித உபாயங்களால் இந்தக்கலஹத்தை ஸமாதானப்படுத்த பகவான் யத்தனம் செய்தும் திருதராஷ்ட்ரனும் அவனுடைய குமாரர்களும் சமாதானத்திற்கு உட்படாமல் பாண்டு குமாரர்களை அநேக விதமாகப் பிடித்து வந்தார்கள். பாண்டு குமாரர்களும் மேஜர்களாகிப் பாஞ்சாலதேசத்தரசனுகிய துருபதனுடைய பெண்ணுன திரௌபதி தேவியை விவாஹம் செய்துகொண்டு திருதராஷ்டிரனும், துர்யோதனுதிகளாலும் செய்யப்பட்ட ஹிம்சைகளைப் பொறுத்துக்கொண்டே பகவான் ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருவடியின் தியானத்தால் கொஞ்ச காலம் கழித்தார்கள்.

பிறகு, பகவானுடைய இச்சையை அனுசரித்துத் திருதராஷ்ட்ரனுடைய குமாரர்களான துர்யோதனுதிகளுக்கும், பாண்டுவின் குமாரர்களான யுதிஷ்ட்ரன் முதலானவர்களுக்கும் பெரிதான யுத்தம் குருக்ஷேத்திரத்தில் எற்பட்டது. அப்படி குருக்ஷேத்திரம் என்ற புண்ணிய பூமியில், பாண்டவர்களும், கௌரவர்களும் யுத்தம் புரிவதற்குச் சென்று மிகவும் ஊக்கத்துடன் இருந்தார்கள் என்ற விருத்தாந்தத்தை மாத்திரம் திருதராஷ்ட்ரன் அறிவான். பிறகு நடந்த விருத்தாந்தத்தைத் தான் அறியாத காரணத்தால் அந்த விருத்தாந்தத்தை நன்ருய் அறிந்த ஸஞ்சயன் என்ற தனது மந்திரியினிடம் திருதராஷ்ட்ரன் கேட்டுத் தெரிந்துகொண்டான். உண்மையில், அந்தத் திருதராஷ்ட்ரனும் தனது குமாரர்கள் செய்

ததை தப்பு என்றும், பாண்டவர்கள் செய்தது சரி என்றுந்தான் அபிப்பிராயம் உள்ளவன்.

அவனது அபிப்பிராயத்தின் சாராம்சமாவது: பகவான் கிருஷ்ணன் பாண்டவர்களைத் தனது பிராணனாகவே எண்ணு கிறவர். பிராணன் சரீரத்திற்குள்ளேதான் இருக்கும். பாண்டவர் களும் கிருஷ்ணனுடைய பிராணனைப்போல் ஆகிறபடியால் பகவா னான கிருஷ்ணன் பாண்டவர்களுக்குச் சரீரம்போல் ஆகிறான். பாண்டவர்களோடு யுத்தம்செய்ய இச்சையுள்ள துர்யோதனாதி கள் பிராணனோடு யுத்தம்செய்ய ஆரம்பித்ததுபோல்தான் ஆகிறது. பிராணனோடு யுத்தம்பண்ண வேண்டுமானால் அந்தப் பிராணன் எந்த சரீரத்தில் இருக்கின்றதோ அந்த சரீரத்தோடு யுத்தம்பண்ண வேண்டியது அவசியமாக நேரிடுகிறபடியால், பிரணனைப்போ லொத்த பாண்டவர்களோடு யுத்தம்பண்ணுவதற்கு அந்த பாண்டவர்களுக்கு ஆச்ரயமான பகவானோடும் யுத்தம்பண்ணும் படி ஆகிறது. துர்யோதனாதிகள் கிருஷ்ணனுடைய உண்மை யான ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ள முடியாத அஞ்ஞானத்தால் மூடப்பட்டு பரமாத்மாவோடு போர்செய்ய ஆரம்பித்தார்கள். இது மிகவும் கஷ்டமானது. லோகத்திலும் நிந்திக்கத்தகுந்தது. யோகி கள் எந்தப் பரமாத்ம ஸ்வரூபத்தைக் காணவேண்டுமென்று யோகாப்யாசத்தாலேயே தனது உயிர் முழுவதையும் செலவழிக் கிறார்களோ, அந்த பரமாத்மா பிரத்யக்ஷமாக முன்னிலையில் விளங்கும்பொழுதும் துர்யோதனாதிகள் பாக்யமில்லாதவர்களாக ஆகி அந்த பரமாத்மாவின் ஸ்வரூபத்தைத் தரிசனம் செய்து ஆனந்தத்தை அடையாமல் இருப்பதோடுங்கூடப் பரமாத்மாவோடு த்வேஷத்துடன் போர் செய்யவும் ஆரம்பித்தார்கள். இதற்கு அந்தக் கிருஷ்ணபரமாத்மாவை பரமாத்மா என்று தெரிந்து கொள்ளாதிருக்கும் அறியாமைதான் காரணமாகும். மேலும் பர மாத்மாவை ஆத்ம ஸ்வரூபமாக வேதங்கள் முறையிடுகின்றன. துர்யோதனாதிகளுக்கும் அவர்களுடைய ஆத்மாவைக்காட்டிலும்

பரமாத்மா வேறில்லை. அப்படி இருக்கும்பொழுது பரமாத்மா வோடு யுத்தம்பண்ணத் துணிந்தார்கள். அது ஆத்ம துரோகத் தில் தான் வந்து முடியும். இவ்விதம் அஞ்ஞானத்தால் மூடப் பட்டவர்களாகத் துர்யோதனாதிகள் ஆகிவிட்டார்கள். இதற்குச் சமானமான கஷ்டம் வேறொன்றுமே ஜகத்தில் இல்லை. பெரிய அஞ்ஞானிகள் துர்யோதனாதிகள். இதை ஒருவரும் சரியென்று ஒப்புக்கொள்ளமாட்டார்கள் ரொம்பவும் நிந்திக்கத்தகுந்த காரி யம் இதுவே யென்று மிகவும் வியசனத்துடன் திருதராஷ்ட்ரன் துர்யோதனாதிகளை நினைத்துக்கொண்டு தான் துர்யோதனாதிகளு டைய சார்பாக ஸஞ்சயனைப் பார்த்து ஸஞ்சயா' பாண்டவர்களும் கௌரவர்களும் குருக்ஷேத்ரம் என்ற புண்ணியபூமியில் போர் செய்ய வேண்டுமென்ற ஆவலுடன் சேர்ந்தார்களே, துர்யோத னாதிகள் என்ன செய்தார்கள் என்று கேட்டான்.

பாண்டவர்களுடைய சார்பாகவோ, திருதராஷ்ட்ரனுடைய அபிப்ராயத்தைக் கவனிக்கும் பொழுது பகவானை கிருஷ்ண னிடத்தில் திருடமான சினேகத்தைச் செய்து கொண்டு துர்யோத னாதிகளோடு யுத்தம்பண்ணி ஹஸ்தினாபுரத்தில் ராஜ்யஸ்ரீயை அடையவேண்டுமென்ற இச்சையுள்ளவர்களாகத்தான் இருந்தார் கள். ஆகிலும், பகவானுடைய அனுக்ரஹம் பரிபூர்ணமாக இருந்த காரணத்தால், அல்பமான ராஜ்யஸ்ரீயை ஆசைப்பட்டவர்களுக்கும் அத்வைத சாம்ராஜ்ய ராஜ்யத்தில் அனாயாஸமாக ஸ்ரீகிருஷ்ணன் பாண்டவர்களுக்கு அபிஷேகம் செய்து பிரம்ம நிஷ்டர்களாகப் பாண்டவர்களைச் செய்தார். இரண்டு சேனைகளுக்கு நடுவில், பகவான் தேரை நிறுத்தினவுடன் அர்ஜ்ஜுனன் பீஷ்மர் முதலான பெரியோர்களைப்பார்த்து இவர்களோடு யுத்தம்பண்ணினால், நமக்கு எப்படி சிரேயஸ் ஏற்படும் என்று எண்ணிப் பகவானிடத்திலும் நான் யுத்தம்பண்ணமாட்டேன் என்றுசொல்லித் தன் கையிலுள்ள வில்லையும் எறிந்துவிட்டுத் தேர்க்காலில் உட்கார்ந்துகொண்டு தனது சோகமோஹத்தைப் பகவானது எதிரில் பிரகாசம் பண்ணினது

20-5

பகவானது மூலமாக அத்வைத சாம்ப்ராஜ்ய ராஜ்யத்தில் தான் பட்டாபிஷேகம் செய்துகொண்ட பெருமைக்குப் பெரிய காரண மாகிறதல்லவா! கிளிஞ்சலைப் பார்க்கப் போகிறவனுக்கு வைடூர்ய மணி அகப்பட்டாற்போல் அல்பமான ராஜ்யத்தை இச்சித்த பாண்டவர்களுக்கு மோக்ஷ சாம்ப்ராஜ்ய ராஜ்யம் அகப்பட்டதைக் காட்டிலும் மேலான ஆச்சரியம் எது? இவ்விதமான பரமபாக்கியம் பாண்டவர்களுக்கு ஏற்பட்டதற்குப் பகவானுடைய சௌலப்யம் அவர்களுக்கு இருப்பதுதான் காரணமாகும். இதனுல் பாண்டவர் களுக்குப் பகவானுடைய தத்வ ஞான வித்தையானது ஏற்பட்டது என்றது வெளியாகிறது.

கௌரவர்களுடைய சார்பாக அபிப்பிராயத்தைக் கவனிக் கும்பொழுது அவித்தையின் தத்வமும் பாண்டவர்களுடைய சார் பாக அப்பிராயத்தைக் கவனிக்கும்பொழுது வித்தையின் தத்வமும் ஸஞ்சயனைத் திருதராஷ்டிரன் கேள்விகள் கேட்கும் சந்தர்ப்பத்தால் வெளியாகிறது.

பிறகு, ஸஞ்சயனும் திருதராஷ்ட்ரனுக்குப் பதில் சொல்லுவ தாவது:— ஏ திருதராஷ்ட்ரனே! உன்னுடைய குமாரனை துர் யோதனன் யுத்தகளத்தில் பாண்டவர்களுடைய சேனையைப் பார்த்தமாத்திரத்தில் பயங்கொண்டு துரோணுசாரியனுடைய சமீ பம் வந்தான். ஆனல், ஆசாரியனுடைய சமீபம் வரும்பொழுது பாண்டவ சேனையைப் பார்த்துத் தான் பயத்தை அடைந்ததை வெளிக் காட்டிக்கொள்ளாமல், வெளிக்கு ரொம்பவும் தைரியம் உள்ளவன்போல் நடித்துக்கொண்டு துரோணுசாரியரைப் பார்த்துச் சொன்னதாவது:— ஏ ஆசாரியனே! பாண்டவர்களுடைய சேனை கள் ரொம்பவும் பெரிதாயும், அநேக சூராளான புருஷர்களால் அலங்கரிக்கப்பட்டதாயும் விளங்கி வருகிறதைத் தாங்களும் கவ னித்துப் பார்க்கவேண்டும். தங்கள் சிஷ்யனை திருஷ்டத்யும்னன் தான் சேனு நாயகனுக சு இருந்து வருகிருன். அந்த சேனையில் சரீர பலத்தில் பீமசேனனுக்குச் சமானமாயும், புத்தி பலத்தில் அர்ஜுனனுக்குச் சமானமாயும் உள்ள அநேக மஹாரதர்களான

ராஜாக்கள் விளங்கி வருகிறார்கள். அதை நன்றாய்க் கவனித்துப் பார்த்துத் தாங்கள் ஆலோசிக்கவேண்டும். ஆனால், நமது சேனா மண்டலத்திலும், அநேகம்பேர்கள் சௌரிய வீர்யங்களோடு கூடினவர்களாயும் சேனா நாயகர்களாயும் விளங்கிவருகிறார்கள். தாங்கள், பீஷ்மர், அச்வத்தாமா முதலான பெரியோர்கள் நமது சேனைக்குப் போஷகர்களாக இருக்கும்பொழுது ஒன்றும் சிந்திக்கும் படியான காரியமே இல்லை. மேலும், பாண்டவர்களுடைய சேனையோ, எழு அக்ஷௌஹிணிதான். நமது சேனையோ, பதினொரு அக்ஷௌஹிணி. அவர்களுடைய சேனைகளைக்காட்டிலும் நமது சேனை அதிகமாக இருப்பதினாலும், நாம் கவலைப்பட வேண்டியதேயில்லை. பீஷ்மருடைய சரீரத்திற்கு அபாயமில்லாமலிருக்கும் பட்சத்தில், நமது ஜயத்திற்கு யாதொரு ஆக்ஷேபணையும் இல்லை, என்று துரோணாசாரியரிடத்தில், பாண்டவசேனையைப் பார்த்த மாத்ரத்தில், பயத்துடன் துர்யோதனன் சொன்னான்.

இதற்கு ஆசாரியனுடையமூலமாக என்ன பதில் வருகிறது என்று துர்யோதனன் எதிர்பார்த்தும் துரோணாசாரியருடைய முகத்திலிருந்தும் ஒரு வார்த்தையும் வரவில்லை. அந்த காரணத்தாலும் துர்யோதனனுக்குப் பயம் அதிகமாக எற்பட்டது. ஆகிலும் அந்த பயத்தை வெளிக்காட்டாமல், தனது சேனை பாண்டவ சேனையைக் காட்டிலும் அதிகமாக இருக்கிறதென்ற அஹங்காரத்தையும் வெளியிட்டான். இப்படிப் பயத்தையும் அஹங்காரத்தையும் வெளியிட்ட துர்யோதனன் பகவானுடைய பெருமையை அறியாத மூடன் என்று நினைத்துத்தான் துர்யோதனனுக்குப் பதிலே சொல்லாமலிருந்தார். ஆனால் பகவானுடைய பெருமையைத் தெரிந்த துரோணாசாரியார் பகவானுடைய பெருமையை உபதேசித்துத் துர்யோதனனைச் சரணமாக அடையும்படி செய்து ராஜி செய்துவிடலாமோ என்று நினைத்தார். பிறகு அவருக்கே அது சரியில்லை என்று தோன்றிவிட்டது. ஆசுரசம்பத்தில் பிறந்த துர்யோதனனிடம் பகவானுடைய பெருமையை நாம் உபதேசிப்பதால் எப்படி உபதேசம் அவனுடைய மனதில் எறும்.

அத்துடன் அப்படி உபதேசம் எறினாலும், அவன் சரணமடைந்துவிட்டால் அவனையும் ரக்ஷிக்கும்படியான நிர்ப்பந்தம் பகவானுக்கு எற்பட்டுவிடுகிறபடியால் பூபாரத்தைக் குறைப்பதற்காக அவதரித்த பகவானுடைய அவதாரமானது பலன் இல்லாததாக ஆகிவிடும். அதற்கு நாம் காரணமாக ஆகவேண்டாம். அத்துடன் துர்யோதனனை உத்ஸாகப்படுத்தப் பகவானால் அலங்கரிக்கப்பட்ட பாண்டவ சேனையை நிந்தித்துத் துர்ப்பலமாகச் சொன்னாலும், பகவானுடைய அபராதத்தைச் செய்தவனாக ஆவோம். அதுவும் சரியல்ல. நாமோ கர்மவசத்தாலோ, பகவானுடைய இச்சானுஸாரமாகவோ பகவானுக்கு விரோதிகளான துர்யோதனாதிகளுடைய கக்ஷியில் சேர்ந்துகொண்டவர்களாக ஆனோம். அந்தப் பயம் ஒன்று போதாதா? நாம் என்ன பதில் சொல்லுகிறது என்று நினைத்துத்தான் துர்யோதனன் சொன்னதற்கு துரோணாசாரியார் ஒன்றுமே பதில் சொல்லாமலிருந்தார்.

துரோணாசாரியர் பதில் சொல்லாததற்கு மேல் காட்டிய யுக்திகள்தான் காரணமாகும். துர்யோதனன் துரோணாசாரியரோடு பேசிக்கொண்டிருக்கும் சந்தர்ப்பத்தில் பயமும், அஹங்காரமும் துர்யோதனனிடத்தில் இருந்து வருகிறதாக வெளியாயிற்று. பயத்திற்கும் அஹங்காரத்திற்கும் காரணம் அவித்தைதான். லோகத்திலும் அவித்வானிடத்தில்தான் பயமும் அஹங்காரமும் காணப்படுகின்றன. சர்வஜகத்திற்கும் மூலகாரணமான பிரம்மமாகவேதான் இருந்தும் தனது ஸ்வரூபத்தைத்தான் பிரம்மமென்று தெரிந்துகொள்ளாததேதான் அவித்தை என்று சொல்லப்படும். இந்த அவித்தையானது பாவரூபமான பதார்த்தமென்பது வேதாந்திகளின் சித்தாந்தம். ஞானத்தின் அபாவந்தான் அஞ்ஞானம் என்ற அவித்தை என்பது சிலர்களுடைய அபிப்பிராயம். அது சாஸ்திரசம்மதமாக ஆகாது. அஞ்ஞானம் அபாவரூபமானால், அபாவத்திற்கு ஸ்வரூபமே இல்லாததினால் தான் ஒரு காரியத்தை உண்டுபண்ணச் சக்தி உள்ளதாக ஆகாது. அஞ்ஞானத்தினின்றுமோ, பயம் முதலான காரியங்கள் உண்டாகின்றன. இராத்திரி

காலத்தில் பழுதையைப் பார்க்கும்பொழுது பாம்புபோல் தோன்று கிறது. அந்தப் பாம்பிற்கு பழுதையைப் பழுதை என்று தெரிந்துகொள்ளாத அஞ்ஞானம்தான் காரணமாகுமல்லவா. அந்த இடத்தில், அஞ்ஞானம் அபாவரூபமானல், பாம்பு என்ற காரி யத்தை எப்படி உண்டுபண்ணும். பாம்பு என்ற காரியத்தை உண்டுபண்ணுகின்றது என்பதோ பிரத்யக்ஷமாக அநுபவிக்கப் படுகிறது. ஆகையால் அஞ்ஞானமென்ற அவித்தையை பாவரூப மாகத்தான் ஒப்புக்கொள்ளவேண்டும்.

தவிர இந்த அஞ்ஞானம், ஞானமென்ற வித்தை ஏற்பட்ட வுடன் அழிந்தும் போகிறது. பழுதையைப் பழுதையென்று தெரிந்துகொண்டால், பழுதையின் அஞ்ஞானம் போகிறதல்லவா. அவித்தையைப் பாவரூபமென்று சொல்லுவதுபோல், வித்தையால் அழிகிற காரணத்தால், வித்யாநிவிர்த்யம் என்றும் வேதாந்திகள் சொல்லுவார்கள். அத்துடன் அநாதியாகவும் சொல்லப்படுகின் றது. அவித்தையின் ஆதி ஒருவராலும் கண்டுபிடிக்கமுடியாது. இராத்திரி காலத்தில் வரும் இருளின் ஆதியைக் கண்டுபிடிக்க முடி யுமா? அந்த இருளை நிவிருத்திசெய்வதில்தான் புருஷன் பிரவிருத்தி செய்வதுபோல், அஞ்ஞானத்திற்கு விரோதியான வித்தையைச் சம்பாதித்து அவித்தையை நிவிருத்திசெய்துகொள்வதில்தான் புரு ஷன் யத்தனம்செய்யவேண்டுமே தவிர அவித்தையின் ஆதியைக் கண்டுபிடிப்பதில் யத்தனம்பண்ணுவது பிரயோஜனமற்றது. அவித் தையின் ஆதியைக் கண்டுபிடிக்கவும் முடியாது. இதனுல், பாவரூப மாகவும், வித்யா நிவிர்த்யமாகவும் இருக்கும் அவித்தை அநாதியாக வும் இருக்கிறதென்று ஏற்படுகிறது. இவ்வித லக்ஷணமுள்ள அவித்தைதான் பயத்திற்கும் அஹங்காரத்திற்கும் காரணமானதால் அவித்தையின் காரியமான பயம் அஹங்காரமென்ற இவ்விரண்டும் துரோணசாரியரோடு பேசும் சந்தர்ப்பத்தில் துர்யோதனனிடத் தில் வெளியாகிறபடியால், துர்யோதனனிடத்தில் அவித்தை குடி யிருந்துவருகிறதென்பது பிரகாசமாகிறது

தவிர, ஆவரணம் விக்ஷேபம் என அவித்தைக்கு இரண்டு சக்தி உண்டு. உண்மையில் இருக்கும் வஸ்துவை மறைப்பதே ஆவரணமாகும். அந்த ஆவரணமும், இருக்கும் வஸ்துவை, இல்லையென்று காட்டுகிற அஸத்வாபாதகம் என்றும் இருக்கும் வஸ்துவைப் புலப்படாமற்செய்கிற அபானுபாதகம் என்றும் இரு வகைப்படும். இராத்திரி காலத்தில் பழுதையைப் பார்க்கப் பாம்பு போல் தோன்றுகிற இடத்தில், உண்மையில் இருக்கும் வஸ்து பழுதையே. இந்தப் பழுதையை இது பழுதை என்று தெரிந்து கொள்ளாத அஞ்ஞானமானது அஞ்ஞானிக்குத் தெரியாமல் மறைத்துவிடுகிறது. அந்த மறைவில் சிலர்களுக்குப் பழுதையே இல்லை என்றும், சிலர்களுக்கு இருக்கும் பழுதை தோன்றுமலும் ஏற்படுகிறது. இருக்கும் பழுதையை இல்லாமல் தோன்றச் செய்கிறதே அஸத்வாபாதகமான ஆவரணத்திற்கு உதாரணமாகும். இருக்கும் பழுதையை இது பழுதை என்று புலப்படாமற் செய்வதுதான் அபானுபாதகமான ஆவரணத்திற்கு உதாரணமாகும்.

பிரகிருதத்திலும், துர்யோதனனிடத்தில், இவ்விரண்டு விதமான ஆவரண சக்தியோடு கூடின அவித்தை இருந்துவருகிறது. அதாவது, கிருஷ்ணபரமாத்மா உண்மையில் பரப்ரம்மமே. அப்படி ஈசுவரனாகக் கிருஷ்ணனிருக்கும்பொழுது துர்யோதனனுக்குக் கிருஷ்ணன் ஈசுவரன் இல்லை என்று தோன்றுகிறது. இதனால் அஸத்வா பாதகமான ஆவரண சக்தியோடு கூடினவன் துர்யோதனன் என்று தோன்றுகிறது. விசுவரூப அத்தியாயத்தில்' ஸ்ரீகிருஷ்ணன் தனது விசுவரூபத்தைப் பாண்டவர்களுக்குப் பிரகாசப்படுத்தினபொழுது துர்யோதனன் சமீபத்தில் இருக்கிறவனுயிருந்தாலும், அந்தப் பரமாத்மாவினுடைய விசுவரூபம் துர்யோதனனுக்கு விளங்கவில்லை. அதனால் அபானுபாதகமான ஆவரணமும் துர்யோதனனுக்கு இருக்கிறது என்று விளங்குகிறது. விக்ஷேபசக்தியும் துர்யோதனனுக்கு இருக்கிறது. இல்லாமல் இருக்கும் வஸ்துவை இருக்கச்செய்யும் சக்தியே விக்ஷேபசக்தி

யாகும். உண்மையில் கிருஷ்ணபரமாத்மா மனுஷ்யனுகஇல்லாம லிருந்தும் துர்யோதனனுடைய புத்திக்கு ஒரு மனிதனுகவே தோன்றி ஞர். ஸ்ரீகிருஷ்ணனுல் அலங்கரிக்கப்பட்ட பாண்டவ சைன்யத்தைக் காட்டிலும் தனது சேனைகள் தெய்வ பலமில்லாத காரணத்தால் மிகவும் துர்ப்பலமாகஇருந்தும் துர்யோதனனுடைய புத்திக்குப் பாண்டவசேனைகளுக்கு முடிவுஉண்டு என்றும் தனது சேனைகளுக்கு முடிவேஇல்லை என்றும் விபரீதமாகத் தோன்றியது. ஒருவிதத்திலும் பிரபலமாக ஆகாத தனது சேனையைப் பிரபலமென்று துர்யோதனன் நினைத்ததேதான் விக்ஷேபசக்தியாகும்.

ஒரு குளத்தின் கரையிலுள்ள விருக்ஷமானது கீழ்ப்பாகத்தில் மூலமும் மேற்பாகத்தில் அக்ரமும் உள்ளதாக உண்மையில் இருந் தாலும் ஜலத்திற் பார்க்கும்பொழுது அந்த விருக்ஷமே தலைகீழாக மேற்பாகத்தில் மூலமும் அடிப்பாகத்தில் அக்ரமும் உள்ளதுபோல் தோன்றுகிறது. இது விக்ஷேபசக்திக்கு உதாரணமாகும். இப்படி ஆவரணம் விக்ஷேபம் என்ற இரண்டுவிதமான சக்தியோடு கூடின அவித்தை துர்யோதனனிடத்தில் இருந்து வருகிறபடியால் பகவானுடைய ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளக் காரணமேற் படாமல் பாண்டவ சேனையைப் பார்த்துப் பயந்து துரோணு சாரியரிடம் போய் ஆலோசனை செய்தான். துரோணு சாரியாரோ ஒன்றுக்கும் மறுமொழியே சொல்லாமல் துர்யோ தனனைத் திரஸ்கரித்தார். இந்த வார்த்தையை ஸஞ்சயனுடைய முகமாகத் திருதராஷ்டிரன் கேட்டுத் தனது குமாரனை துர்யோ தனன் பாண்டவ சேனையைப் பார்த்துப் பயந்ததையும் பயத்தைப் பரிஹாரம் பண்ணிக்கொள்ளத் துரோணுசாரியரிடத்திற் போயும் துரோணுசாரியாராலும் துர்யோதனன் மூர்க்கன் என்று திரஸ் கரிக்கப்பட்ட விஷயத்தையும் அறிந்து துரோணரும் பீஷ்மரும் ஒன்றானபடியால் பீஷ்மராலும் தனது குமாரன் திரஸ்கரிக்கப்பட்ட வனுகத்தான் ஆகுவன் என்றதையும் நினைத்துத் தன்னுடைய குல மே நஷ்டமாக ஆகிவிட்டது என்று மிகவும் வருத்தத்துடன்

துக்கத்தை அனுபவித்துவந்த திருதராஷ்ட்ரனைப் பார்த்து மறுபடியும் ஸஞ்சயன் ஸமாதானப்படுத்தினன்.

அதாவது: ஏ! ராஜனே துர்யோதனனைத் துரோணாசாரியர் திரஸ்கரித்ததுபோல் பீஷ்மர் திரஸ்கரிக்கவில்லை. பாண்டவ சைன்யத்தைப் பார்த்துப் பயந்து துரோணரால் திரஸ்கரிக்கப்பட்டு. பிராணன் போனதுபோல் துர்யோதனனுடைய சரீரம் ஆகிவிட்டது அதை அறிந்த பீஷ்மர் பிராணன் போனவன் போலிருந்த துர்யோதனனை உஜ்ஜீவிக்கச்செய்ய ஸிம்மநாதம் பண்ணினர். சங்கத்தையும் முழக்கினர். இந்த ஸிம்மநாதத்தாலும் சங்கத்வனியாலும், துர்யோதனனுக்குச் சந்தோஷத்தை உண்டுபண்ணினரே யொழிய பாண்டவர்களுடைய சேனைக்குப் பயத்தை உண்டுபண்ணவில்லை. பகவானன ஸ்ரீகிருஷ்ணனால் பாதுகாக்கப்பட்ட பாண்டவசேனைகளை ஜயிக்கப் பீஷ்மரோ, மற்றவரோ, யாருக்குத்தான் சக்தி எற்படும், பயந்த துர்யோதனனுக்கு தற்காலம் சமாதானம்செய்துவைப்போம் என்றதுதான் பீஷ்மருடைய உண்மையான அபிப்பிராயம். பீஷ்மர் ஸிம்மநாதம் செய்தவுடன் பீஷ்மரால் அலங்கரிக்கப்பட்ட கௌரவர்களுடைய சேனைகளிலும் சங்கநாதமும் அநேகவிதமான வாத்திய கோஷங்களும் எற்பட்டன.

இவ்விதம் கௌரவர்களுடைய சேனைகளில் யுத்தத்தின் ஸந்நாஹம் எற்பட்டதைப் பார்த்துப் பாண்டவர்களுடைய சேனைகளுக்கு ரக்ஷகராயும் பிராண பூதமாயும் விளங்கிவரும் பகவான் ஸ்ரீகிருஷ்ணனும் அர்ஜுனனும் வெள்ளைக்குதிரையால் அலங்கரிக்கப்பட்ட திவ்ய ரதத்தில் இருந்துகொண்டு பாஞ்சஜன்யம் என்ற சங்கத்தைப் பகவானும் தேவதத்தம் என்ற சங்கத்தை அர்ஜுனனும் வாசித்தார்கள். பிறகு பீமசேனன், தர்மபுத்திரர், நகுலன், ஸஹாதேவன் என்ற பாண்டவர்களும் திருஷ்டத்யும்னன்முதலான ராஜாக்களும் சங்கநாதம் செய்தார்கள். அப்படிப் பாண்டவசேனையில் எற்பட்ட சங்கத்துவனியானது

கௌரவ சேனைகளுடைய மனதைப் பிளக்கிறதாக இருந்து கொண்டு உலகம் முழுதையும் வியாபித்தது.

பிறகு அர்ஜுனனும் கௌரவசேனைகளைப் பார்த்து அநேக விதமான சஸ்திரங்களையும் ஒருவருக் கொருவர் பிரயோகம் பண்ணி எதிரிகளை ஜயிக்கும் முயற்சியையும் தெரிந்துகொண்டுதான் காண்டீவம் என்ற தனுசையும் எடுத்துக்கொண்டு பகவானைப்பார்த்து எ! பிரபுவே! இரண்டு சேனைகளுக்கும் நடுவில் ரதத்தைக் கொண்டு போய் நிறுத்துவாயாக. மூர்க்கனான துர்யோதனனுடைய சார் பாக நம்மோடு யுத்தம்பண்ண வந்திருக்கும் ராஜாக்களை நான் பார்க் கிறேன், யார் யார் யுத்தத்திற்குத் தயாராக இருக்கிறார்கள் என் றதை அவசியம் தெரிந்துகொள்ளவேண்டாமா என்று கேட்டான். பிறகு பகவானும் அர்ஜுனன் சொற்படி இரண்டு சேனைகளுக்கும் நடுவில், பீஷ்மர், துரோணர் இவர்களுக்கு எதிராக, ரதத்தைக் கொண்டுபோய் நிறுத்தி அர்ஜுனனைப் பார்த்து எ! அர்ஜுனா, கௌரவ சேனைகளைப் பார் என்று சொன்னார்.

அர்ஜுனனும் இந்த கௌரவ சேனையில் விளங்கிவரும், பூஜ்யாளான பெரியோர்களைப் பார்த்தான். அதாவது ஆசாரிய ஸ்தானத்தில் உள்ள துரோணர் முதலானவர்களையும் பிதா மக ஸ்தானத்திலுள்ள பீஷ்மர் முதலானவர்களையும் பித்ரு ஸ்தானத்திலுள்ள பூரிச்ரவஸ் முதலாவர்களையும், சஹோதர ஸ்தானத்திலுள்ள துர்யோதனன் முதலானவர்களையும், புத்திர ஸ்தானத்திலுள்ள லக்ஷ்மணன் முதலானவர்களையும், இன்னும் அநேக மித்தி ரர்களையும், ஸுஹ்ருத்துக்களையும், ஸஹாக்களையும் உள்ள பெரி யோர்களையும் பார்த்தான். பார்த்தவுடன் இவ்வளவு பெரியோர் களையும் வதம் பண்ணி அல்பமான ராஜ்யத்தை அடைவதனால், நமக்கு எவ்விதம் சிரேயஸ் எற்படும் என்ற பரிதாபத்துடன் மிகவும் கருணையைக்கொண்டு கிருஷ்ணனைப்பார்த்து அர்ஜுனன் சொல்லு கிறான்.

ஏ, கிருஷ்ணு! என்னோடு யுத்தம் பண்ண வேண்டுமென்று துர்யோதனன் முதலானவர்கள் எதிரிகளாக வந்து இருந்தாலும், எனக்கு அவர்களைப் பார்க்கும்பொழுது என்னுடைய சரீர முழுவதும் நடுங்குகிறது, முகமும் வாடுகிறது, மயிர்க்கூச்சலும் ஏற்படுகிறது. கையிலுள்ள காண்டீவ மென்ற வில்லும் நழுவிக் கீழே விழுகிறது. தேகமெல்லாம் ஒரே எரிச்சலாகவே எரிகிறது. இந்த யுத்த களத்தில் நிற்பதற்குக் கூட எனக்கு சம்மதமில்லை. அபஜயத்திற்கு சூசகமான அநேக அசுபங்களையும் பார்க்கிறேன். இவ்விதமான ஸ்வஜனங்களை வதம் செய்து அதனுல் ஒரு சிரேயசை அடையலாம் என்று எனக்குத் தோன்றவில்லை. நான் விஜயத்தை இச்சிக்கவுமில்லை. ராஜ்யமும் வேண்டாம் சுகமும் வேண்டாம். ராஜ்யத்தால் என்ன பிரயோஜனம்? எவர்களுடைய நிமித்தமாக ராஜ்யமும் சுகமும் மனுஷ்யனுக்கு ஏற்படுகிறதோ அவர்களே எதிரிகளாக வந்து நின்று கொண்டு யுத்தத்திற்கு வந்தார்களேயானுல், அவர்களை நான் கொன்றுவிட்டு அந்த ராஜ்யத்தை என் அடைய வேண்டும்? அதனுல் எனக்கு ஒரு விதமான பிரயோஜனமும் ஏற்படுவதாகத் தோன்றவில்லை. குரு ஸ்தானத்திலுள்ள பெரியோர்களும் பிதிரு ஸ்தானத்திலுள்ள பெரியோர்களும், இன்னும் பூஜ்யஸ்தானத்திலுள்ள அநேகவித பெரியோர்களும் கௌரவர்களுடைய சேனையில் நமக்கு எதிரியாக நின்று வருகிறவர்களாக ஆனுலுங்கூட அவர்களை நான் எதிரியாக நினைத்து அவர்களோடு போர் செய்வதற்குத் தயாராகயில்லை. அவர்கள் என்னைக் கொன்றுலுங்கூட அவர்களை நான் கொல்வதற்கு எண்ணமுள்ளவனுக ஆகமாட்டேன். மூன்று லோகத்திற்கும் ராஜாவாக நான் ஆவதற்குக்கூட ஒரு பிராணியை ஹிம்சித்து அந்த லாபம் கிடைப்பதனுல், அதை உபேக்ஷித்து விடுவேன். அல்பமான இந்தப் பூலோகத்தில் அரசாளுவதற்காகப் பூஜிக்கத்தகுந்த மஹான்களைக் கொன்று அரசாளுவதற்கு என் மனம் துணியுமா?

திருதராஷ்ட்ரனுடைய புத்திரர்களான துர்யோதனுதிகளைக் கொன்று நாம் என்ன சந்தோஷத்தை அடையப் போகிறோம்?

பாபம்தான் ஏற்படும். ஆனால், இந்தத் துர்யோதனாதிகள் ஆததாயிகளானதனால், ஆததாயிகளைக் கொல்ல வேண்டும் என்ற நியாயத்தை அனுசரித்துத் துர்யோதனாதிகளை ஏன் கொல்லக்கூடாது? என்று நினைக்கக்கூடும். அது சரியல்ல துர்யோதனாதிகள் ஆததாயிகள்தான். அதாவது; அன்னியனுடைய வீட்டிலோ, மற்ற சொத்துக்களையோ தீ வைத்துக் கொளுத்துகிறவன், கபடமாக விஷத்தைக்கொடுத்து அன்னியனைக் கொல்லுகிறவன், எப்பொழுதும் பர ஹிம்சையைச் செய்வதற்காக அஸ்த்ர சஸ்த்ரங்களைக் கையிலேயே வைத்துக்கொண்டு இருக்கப்பட்டவன், அன்னியனுடைய சொத்தை அபஹரிக்கிறவன், அன்னியனுடைய பூமியை அபஹரிக்கிறவன், அன்னியனுடைய மனைவியை அபஹரிக்கிறவன், இப்படி 6 விதமான பாபிகளை ஆததாயிகள் என்று சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது இந்த 6-பாபங்களுக்குள் ஒன்று இருந்தாலும் அவன் ஆததாயிதான் அவனைக் கொல்லத்தான் வேண்டும். துர்யோதனாதிகளிடத்திலோ, மேற் சொன்ன ஆறு பாபங்களும் இருந்து வருகின்றன. பாண்டு மஹாராஜாவின் புத்திரர்களான எங்களை அரக்கு மாளிகையில் வைத்துத் தீ கொளுத்தவில்லையா, விஷத்தைக் கொடுத்து எங்களைக் கொல்லுவதற்கும் யத்தனம் செய்யவில்லையா, சஸ்த்ரபாணிகளாகவே எப்பொழுதும் இருக்கிறார்கள் என்றதும் பிரசித்தம். எங்களுடைய தனம் பூமி பார்யை இவைகளையும் அபஹரிக்க யத்தனம் செய்து சிலவற்றை அபஹரித்துக்கொண்டார்கள். சிலவற்றை அபஹரிக்க வேண்டுமென்று முயற்சி உள்ளவர்களாகவும் இருக்கின்றார்கள். இவ்விதம் அநேக வித துரோக சிந்தை உள்ள துர்யோதனாதிகளைக் கொல்லுவதுதான் சாஸ்த்ர சம்மதம் என்றாலும், அந்தத் துர்யோதனாதிகளும் ஸ்வ ஜனமானதினால், ஸ்வ ஜனங்களுக்குப் பிரதிகூலமாயிருந்தால், கையானாலும் அதைக்கூட நான் வெட்டிவிடுவேன் என்று தாங்களே செய்திருக்கும் பிரதிக்ஞையை அனுசரித்து ஸ்வஜன சம்ரக்ஷணம் மேலான புண்ணியமென்றதை நாம் ஆலோசிக்கும்பொழுது, அவர்களைக்கொல்ல என் மனம் துணியவே இல்லை. கொல்லுவதினால்

யாபம்தான் மேலிடும் என்பது என்னுடைய நிச்சயம். ஆகையால் திருதராஷ்ட்ரனுடைய புத்திரர்களான துர்யோதனாதிகளை நாம் கொல்லுவதற்கு அர்ஹராளேயில்லை. ஸ்வஜனங்களைக் கொன்று க்ஷேமம் நமக்கு எப்படி ஏற்படும் நான் எப்படித் துர்யோதனாதிகளை ஸ்வஜனம் என்று நினைத்து யுத்தம் பண்ணச் சம்மதமில்லாதவனாக ஆகின்றேனே, அது போல் துர்யோதனாதிகளும், நம்மை ஸ்வஜனம் என்று நினைத்து அவர்களும் யுத்தம் பண்ண சம்மதமில்லாமல் இருப்பது நியாயம்.

ஆனல் அவர்கள் அப்படி இல்லை. ராஜ்யத்தை அடைய வேண்டும் என்ற ஒரு லோபத்தால், விவேகம் இல்லாதவர்களாக ஆகி, குலக்ஷயம் என்ற மஹாபாபத்தில் பிரவிருத்தித்தார்கள். அப்படிக் குலக்ஷயத்தால் வரும் தீமையை, இன்னதென்று வகுத்துத்தெரிந்து கொள்ளாதவர்கள். குலக்ஷயத்தால் வர்ண சாங்கர்யம் ஏற்பட்டுவிடும். அதாவது, ஒரு குலத்திற்கு க்ஷயம் வருகிறது என்றது அந்தக்குலத்திற்கு சந்ததியே இல்லாமையேயாகும். அவ்விதம் ஆனல், குல தர்மத்தை அசரிக்கக்கூடிய கர்த்தா இல்லாத காரணத்தால் குலதர்மமே அழிந்துவிடுகிறது. மீதமுள்ள அந்தக் குலத்திலுள்ள ஸ்திரீ முதலானவர்களை அதர்மம் வந்து வியாபிக்கின்றது. இந்த அதர்மத்தினுடைய வியாப்தியால், குல ஸ்திரீகளும் தோஷமுள்ளவர்களாக ஆகிவிடுகிறார்கள். ஸ்திரீகள் தோஷமுள்ளவர்களாக ஆனல், வர்ண சாங்கர்யம் ஏற்படுகிறது. -பிராம்மணன் க்ஷத்திரியன் வைசியன் சூத்திரன் என்று ஈசுவரனல் 4-வர்ணங்கள் சிருஷ்டிக்கப்பட்டு, ஆங்காங்கு லோகத்தில், விளங்கிவரும் மரியாதையானது போய்விடும். அந்த வர்ண சாங்கர்யமானது நாகத்திற்குத்தான் காரணமாகும். இந்தக்குலத்தின் க்ஷயத்திற்கு யார் கர்த்தாவோ, அவர்களும் எந்தக்குலத்திற்கு க்ஷயம் ஏற்பட்டதோ அந்தக்குலமும், அந்தக்குலத்தைச் சம்பந்தித்த பிதிருக்களும், அந்தகுலத்திற்கு க்ஷயத்தைச் செய்தவனுடைய பிதிருக்களும், நாகத்தை அடைந்து கல்பம் முடிந்தாலும், துக்கத்தினின்றும் மோசனம் இல்லாமல் கஷ்டப்படுவார்கள். இதனல் லோகத்தில் வருண

ங்களின் வித்தியாசம் அழியாமல் இருக்கவேண்டும். அதற்கு ஸ்திரீகள் சுத்தர்களாக இருப்பதேதான் காரணமாகும். ஸ்திரீகள் சுத்தர்களாக இருப்பதற்குச் சந்ததிகளால் குலத்தின் அபிவிருத்தியே தான் காரணமாகும். இதனுல், சந்ததிகளினுல் பிதிருக்களுடைய ரணத்தை நிவிருத்தி செய்ய வேண்டுமென்ற நியாயத்தையும் அனுசரித்துப்பிறகு குலக்ஷயத்தால் எற்படும் பாவியான அனர்த்தத்தையும் அலோசித்து நல்ல பிரயாஜையால், விருத்தி செய்வதே மனுஷ்யனின் கடமையாகும் என்று தெரிகிறது.

தவிர, குல க்ஷயத்தால் எற்படும், முன் சொன்ன தோஷங்கள் வலுக்க குலதர்மமோ, ஜாதி தர்மமோ ஆசிரமதர்மமோ நசித்துவிடும். 'அப்படி குலதர்மமும் ஜாதி தர்மமும் ஆசிரமதர்மமும் இல்லாதவனுக்கு எப்பொழுதும் நாகத்திலேயே வாசம் என்று பெரியோர்கள் மூலமாயும் சாஸ்திரங்கள் மூலமாயும் நாம் கேட்டிருக்கின்றோம். எ. கிருஷ்ணு! இவ்விதமான மஹா பாபங்கள் மேல் மேல், விருத்தியாகக் கூடியதற்குக் காரணமான ஸ்வஜனவதம் என்ற மஹத்தான அனர்த்தத்தில் பிரவிருத்தித்து விட்டோமே, என்ன கஷ்டம்! இந்த அல்பமான ராஜ்யத்திற்கு ஆசைப்பட்டல்லவா இந்த அனியாயத்தைச் செய்யத் துணிந்தோம்! ராஜ்ய லோபத்தால், விவேகம் இல்லாதவர்களாகித் துர்யோதனுதிகள் ஸ்வஜன வதத்தில் பிரவிருத்தித்தார்களே என்றதை நாம் விசாரிக்க வேண்டாம். அவர்கள் தெரியாதவர்கள் குலக்ஷயத்தால் வரும் அனர்த்தத்தைத் தெரிந்த நாம் இதுபோலொத்த அனர்த்தத்தில் பிரவிருத்திப்பது உசிதமல்ல. நான் பேசாமல்தான் இருக்கப்போகிறேன், அப்படி உதாசீனமாக இருந்து விட்டேன் என்று அவர்கள் என்னைக்கொன்றாலும் க்ஷேமந்தான் என்று சொல்லிவிட்டு, அர்ஜுனன் ரதத்தின் மேல் பாகத்தில் எறி உட்கார்ந்து கொண்டு வில், பாணம் முதலியவைகளை எறிந்துவிட்டுத் துக்கத்தால், பரவசப்பட்ட மனதோடு கூடினவனுய், விளங்கி வந்தான்.

இதனாலும், அர்ஜுனன் பகவானுடைய ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்ட விவேகியாக உண்மையில் இருந்தாலும், அவனுக்கு ஸ்வஜனவதத்தில் மாத்திரம் வ்யாமோஹம் ஏற்பட்டுவிட்டது. பிராம்மணனுக்கு ஸோமயாகம் முதலான க்ரதுக்கள், எப்படி விஹிதமோ, அப்படி க்ஷத்திரியனுக்கு சோமயாகம் முதலான க்ரதுக்களும், யுத்தமும் விஹிதமானதே ஆகும். ஒரு பிராம்மணன் சோமயாகத்தில் பசுவை ஸம்க்ஞபனம் (ஹிம்ஸை) பண்ணும்பொழுது பசுவத நிமித்தமான வியாமோஹத்தை அவன் அடைந்தானேயானால், அந்தப் பிராம்மணன் விவேகமில்லாதவனாக ஆவதோடுங்கூட சாஸ்திர மரியாதையையும் தாண்டினவனாக எப்படி ஆவானோ அப்படியே, இந்த அர்ஜுனனும் தனக்கு ஸ்வதர்மமான யுத்தத்தில், ஸ்வஜனவத நிமித்தமாக வியாமோஹத்தை அடைந்தது அர்ஜுனனுக்கும் விவேகம் போராது என்றதையும் சாஸ்திர சம்பந்தமான மரியாதையைத் தாண்டுகிறதென்ற ஒரு மௌட்டியமும் இருக்கிறதென்று வெளியாகிறது. முன் சொல்லப்பட்ட பிரகாரம் துர்யோதனாதிகளிடத்தில், மூலாவித்தை என்ற மாயையானது குடியிருந்து கொண்டு துர்யோதனாதிகளுக்கு பகவானிடத்தில் துவேஷத்தை உண்டு பண்ணினதுபோல், பகவானுடைய இச்சையாலோ, அத்வைதத்தின் பெருமையை வ்யக்தமாகக் கீதா சாஸ்திர மூலமாக லோகத்தில் பிராணிகள் தெரிந்துகொள்ளும்படியான பாக்கிய உதயத்தாலோ, அர்ஜுனனிடத்திலும் மூலாவித்தை என்ற மாயை இருந்து கொண்டு அர்ஜுனனுக்கும் தர்மத்தினிடத்தில் துவேஷத்தை உண்டு பண்ணிற்று. இதனால் மாயை என்ற அவித்தையின் பெருமைதான் வெளியாயிற்று.

ஆனால் ஸ்வஜனங்களை வதம் பண்ணுவது தப்பென்று அர்ஜுனன் நினைத்தது சரியல்ல. சோமயாக சமயத்தில் பசுவதம் தப்பென்று யஜமானன் நினைப்பது சரியாகுமா என்று உதாரணத்துடன் நிரூபிக்கப்பட்டதே அது சரியாகுமா? சோமயாகத்திலும், பசுவதம் பாபம்தானே என்று சிலர் நினைக்கக்கூடும். அது

சரியல்ல. பிராணிகளுக்கு இஷ்டமான சுகத்தை அடைய வேண்டுமென்றும், அனிஷ்டமான துக்கத்தை பரிஹாரம் பண்ணிக்கொள்ள வேண்டுமென்றும் ஆசை இருந்து வருகின்றது. அந்த் ஆசையை அனுஸரித்து இஷ்டப்பிராப்திக்கும், அனிஷ்ட பரிஹாரத்திற்கும் உபாயத்தைப் போதிக்கிற சாஸ்திரமே வேதமாகும். அந்த வேதமானது ஈசுவரனுடைய கட்டளை. அந்த ஈசுவரனுடைய கட்டளையாக விளங்கிவரும் வேதமானது, வர்ணங்களின் தாரதம்யத்தையும் ஆசிரமங்களின் தாரதம்யத்தையும் அனுஸரித்து அந்தந்த தர்மத்தை அந்த வேதம் போதிக்கின்றது. வேதத்தால், போதிக்கப்படும் தர்மத்தை நாம் அனுஷ்டிப்பதற்குத்தான் அதிகாரியே தவிர, அந்த தர்மத்தின் தோஷ குணங்களை விசாரிக்க நாம் அர்ஹர்களல்ல.

ஒரு மனிதன், பிறக்குங்காலத்திலேயே, அங்கங்கள் எல்லாம் சரியாக இல்லாமலே, ஒரு கையில், நான்கு விரல்களுடனும், மற்றொரு கையில், ஆறு விரல்களுடனும் பிறக்கிறான். அதற்காக அந்த இரண்டு கையும் தோஷமுள்ளவை என்று வெட்டிவிடுகிறானா? அதுபோல் சோமயாகம் என்ற தர்மத்தில் பசுஹிம்சை என்ற தோஷத்தை ஒப்புக்கொண்டாலும் அது தோஷத்தோடு கூடினது என்றதற்காக அதை விட்டுவிடலாமா? அவனவனுக்கு ஸஹஜமான கர்மா தோஷமுள்ளதாக இருந்தாலும் அதைச் செய்துதான்தீர வேண்டும். சாப்பிடுகிறது என்ற கர்மா தோஷமில்லாத கர்மாவா? அதின் நிமித்தமாக எத்தனை பிராணிகளின் ஹிம்சையைச் செய்ய வேண்டியதாக ஆகிறது? கறிகாய்களைச் செடியிலிருந்தும் பறித்துக் கத்தியால் நறுக்குவது பாபமில்லையா? அந்தக்கறி காய்களும் ஜீவப்பிராணிகள்தானே? ஜலத்தை அடுப்பில் காய வைக்கிறோம். அது ஜலத்தில் உள்ள ஜீவனை ஹிம்சிக்கிறதாக ஆகாதா? இதுபோல் எவ்வளவோ விதமான ஹிம்சை "சாப்பிடுகிறது" என்ற கர்மாவுக்குக் காரணமாக ஆகிறது அதற்காகச் சாப்பாட்டை விட்டுவிடுகிறோமா. இதைத்தான் ஸகஜமான கர்மா தோஷமுள்ளதானாலும்,

அதைவிட முடியாது அனுஷ்டிக்கத்தான் 'வேண்டும்' என்று முன் விவரித்தோம். சோமயாகம் என்ற கர்மாவில் தோஷத்தை ஒப்புக் கொண்டு இந்த சமாதானம் சொல்லப்பட்டது.

உண்மையில் தோஷ லேசமேயில்லை. ராஜாவானவன் "தேவ தத்தனை வதம் செய்" என்று யக்ஞதத்தனைப்பார்த்து ஆக்ஞை செய்கிறன். யக்ஞதத்தன் பிருத்யனானதினால், எதற்காக என்று கேட்கக் கூடாது, ராஜாவின் வார்த்தையை உடனே சிரசால் வஹித்துப்பரிபாலனம் பண்ணத்தான் கடமைப்பட்டவன், அப்படியே யக்ஞ தத்தனும் ராஜாவினுடைய ஆக்ஞையை அனுசரித்து தேவதத்தனையும் வதம் செய்துவிட்டான். அதனால் யக்ஞதத்தனுக்குப் பாபலேசம் உண்டா? ராஜாவினுடைய ஆக்ஞையை மறுக்காமல் பரிபாலனம் செய்த புண்ணியந்தான் அந்த யக்ஞதத்தனுக்கு எற்படும். அந்தத் தேவதத்தனை வதம் பண்ணுவதற்கு என்ன காரணம் என்றதையோ ராஜாதான் அறிந்தவன். யக்ஞதத்தனுக்கு அதை விசாரிப்பதில் அதிகாரமே இல்லை.

அதுபோல், ராஜஸ்தானத்தில் இருந்துவரும் வேதமானது பசுவை ஹிம்சை பண்ணுவாய் என்று ஆக்ஞை செய்யும் பொழுது பிருத்ய ஸ்தானத்தில் உள்ள நாம் அதிகாரத்தை அனுசரித்து அதை அனுஷ்டிக்கத்தான் கடமைப்பட்டவர்களாக ஆகுவோம். எதற்காக? என்? என்று விசாரிக்க அதிகாரிகளில்லை. அந்தப் பசுவதத்தால் தோஷலேசமும் யஜமானனுக்கு எற்படாது. அந்தப்பசுவை வதம் பண்ணுவதற்குக் காரணத்தையோ சகலத்தையும் பிரகாசம் பண்ணி வைக்கும் வேத புருஷனே அறிந்தவன். யஜமானனுக்கு ஈசுவரனுடைய கட்டளையான வேதத்தைப் பரிபாலனம் செய்த புண்ணிய விசேஷந்தான் எற்படும் என்றதில் யாதொரு சந்தேஹமுமில்லை.

தவிர, அந்த ஸோமயாகத்தில் உபயோகப்படுகிற பசுவுக்கு ஸ்வர்க்க லோகத்தில் தேவபாவம் எற்படுகிறதென்று வேதத்தில் முறையிடப்படுகிறது. பசு சரீரத்திற்கு அபிமானியாயிருந்த ஜீவன்

ஸ்வயமாகத் தனக்கு பாபத்திலிருந்தும் விமுக்தி ஏற்பட உபாயத்தை அனுஷ்டிக்க சக்தி இல்லாததென்றது பிரசித்தம். இந்த ஸோமயாகம் என்ற கர்மாவில் உபயோகப்படும் காரணத்தால், பசு பாவத்திலிருந்தும் அந்த ஜீவனுக்கு விமுக்தி ஏற்பட்டுத் தேவ பாவம் சித்திக்கிறது. இவ்விதம் பசுவின் சிரேயசை யஜமானன் செய்தவனாலனே தவிர பசுவை ஹிம்சித்தவனாக மாட்டான். மலை பாஷாணம் என்ற சிலைகளை உளியால் வெட்டி விங்காகாரமாக அந்த வேலையில் சாமர்த்தியமுள்ள மனிதன் செய்கிறான் அது கல்லாயிருக்குங்காலத்தில், பிராணிகளின் காலால் மிதிக்கப்பட்டதாயிருந்தாலும், விங்காகாரமான பிற்பாடு சகல ஜனங்களுக்கும் பூஜ்யமாகின்றது. ஆனால், தக்ஷனனவன் மலையிலிருந்தும் அந்தக்கல்லை வெட்டி எடுத்து உளியால் செதுக்கி வேலை செய்கிறான் அதுவும் ஜீவன்தானே. அவன் செய்கிற வேலை அதற்கு ஹிம்சையாக இராதா? ஆகிலும், சகலப் பிராணிகளுடைய காலிலும் பட்ட அந்தச் சிலைக்குச் சகலப் பிராணிகளாலும், பூஜிக்கத்தகுந்த பெருமைக்கு அந்த ஹிம்சை காரணமாகிறபடியால், அந்த ஹிம்சை ஹிம்சையாக ஆகாமல், அந்தத் தக்ஷனுக்குப் புத்தி சாதுர்யத்தையும் பெருமையையும் கொடுப்பதுபோல், யஜமானன் செய்யும் பசுஹிம்சையும் ஹிம்சையாகாமல் யஜமானிடத்தில் பெரிய புண்ணியத்தை உண்டு பண்ணுவதற்குக் காரணமாகிறது. இந்தப்பசுவானது சகலப்பிராணிகளாலும் நிந்திக்கத்தகுந்த ஆடாக இந்த லோகத்தில் இருந்தும் இந்த யாகம் என்ற கர்மாவில் உபயோகப்படும் காரணத்தால், ஆடாக இருக்கும் தன்மை போய் தேவபாவம் ஏற்பட்டுச் சகல மனிதர்களாலும் பூஜிக்கத்தகுந்த தன்மையை அடைகிறது. ஆகையால் அந்தப்பசுவுக்கு யாகத்தில் ஹிம்சை யேற்படுகிறதென்று எப்படிச் சொல்லலாம்?

தவிர, ஹிம்சையை விலக்க வேண்டுமென்று சொல்லுகிற சாஸ்திரமும் ஆசையால் தன்னுடைய பக்ஷணத்திற்காகப் பிராணிகளை ஹிம்சிக்கக்கூடாது என்ற ராக பிராப்தமான ஹிம்சையை

நிஷேதிக்குமேதவிர விதிப்பிராப்தமான ஹிம்சையை நிஷேதிக்காது விதியில் போதிக்கப்படுகிற ஹிம்சை ஹிம்சையல்ல. ஆகையால் சோமயாகம் முதலிய க்ரதுக்களில், பசு ஹிம்சையை ஹிம்சையாக நினைத்து அதனால் ஒரு பெரிய தோஷ மேற்படுகிறதாக நினைக்கிறவன் அவிவேகிதான். இதுபோல்தான் பிரகிருதத்திலும் அர்ஜுனன், தான் க்ஷத்திரியனாக இருக்கும் காரணத்தால், தனக்கு ஸ்வதர்மமான யுத்தத்தின் பெருமையைத் தெரிந்துக்கொள்ளாமல் யுத்தத்தில் ஏற்பட்ட பிராணிகளுடைய வதம் ராகபிராப்தமல்ல, இது வைதம்தான். ஆகையால் அந்த வதம் வதமாகாது என்ற விவேகம் இல்லாத காரணத்தால் ஸ்வஜன வதத்தை நான் எப்படி அனுஷ்டிப்பேன் என்று பேசுகிறான். இதனாலும், அர்ஜுனனிடத்திலும் பகவானுடைய மாயை என்ற அவித்தைக்குப் பிரவேசம் இருக்கிறதென்று வெளியாகிறது.

இவ்விதம் இந்த அத்தியாயத்தில் கௌரவர்களுடைய சேனையில் பிரதானமான துர்யோதனனுடைய செய்கையிலும், பாண்டவர்களுடைய சேனையில் பிரதானமான அர்ஜுனனுடைய செய்கையிலும் அவித்தையின் விலாசமே பெரும்பாலும் பிரகாசிக்கின்றபடியால், "தத்வமஸி" என்ற மஹா வாக்கியத்தில் அடங்கிய த்வம்பதத்திற்குள், சேர்ந்திருக்கும் அவித்தை, அந்தக் காணம், கர்மயோகம், சன்னியாசம், ஜீவன், கூடஸ்தன், என்ற ஆறு தத்வங்களுக்குள் முதலாவதான அவித்தையின் தத்வமும் அதை ஜயிக்கும் உபாயமும் முதலாவதான ஷட்கத்தின் முதல் அத்தியாயத்தில் விவரிக்கப்படும் என்று உபோத்காத ஸஞ்சிகையில் எழுதியபடி அவித்தையின் தத்வமானது விவரிக்கப்பட்டது.

ஆவரண விக்ஷேப சக்தி மத்வம்என்ற ஸ்வருப லக்ஷணத்தோடும், அனாதித்வேஸதி, பாவத்வேஸதி வித்யா நிவிர்த்தியத்வம், என்ற தடஸ்த லக்ஷணத்தோடும் அவித்தையின் தத்வமானது விஸ்தரிக்கப்பட்டது. லக்ஷணம் பிரமாணம் என்ற இரண்

டினுலுந்தான் ஒரு வஸ்துவுக்கு வஸ்துத்வம் சித்திக்கும் என்ற நியாயத்தை அனுசரித்து அவித்யையின் ஸ்வரூப தடஸ்த லக்ஷணங்கள் சொல்லப்பட்டன. இந்த அவித்யையின் பிரமாணமோ பிரத்யக்ஷமேதான் ஆகும்.

பிரத்யக்ஷம் அனுமானம், உபமானம், சப்தம், அர்த்தாபத்தி அனுபலப்தி என ஆறுவிதம் பிரமாணங்கள் உள்ளன. இந்திரியத்திற்கும் விஷயத்திற்கும் உள்ள சம்பந்தத்தால், உண்டாகும் ஞானத்தைப் பிரத்யக்ஷப் பிரமை என்று சொல்லக்கூடுமானதினுலும், பிரமைக்கு எது காரணமோ அதுவே பிரமாணமென்று சொல்லப்பட்டிருப்பதாலும், இந்திரியத்திற்கும் விஷயத்திற்கும் உள்ள சந்நிகர்ஷத்தை வியாபாரமாக (உதவி காரணமாக) வைத்துக்கொண்டு, பிரத்யக்ஷப் பிரமைக்கு இந்திரியமே அஸாதாரண காரணமாகிறபடியால், காரணமாக சித்தித்து, பிரத்யக்ஷப் பிரமாணமென்று சொல்லப்படும். அந்த இந்திரியம் வெளியில், சக்ஷுஸ், ச்ரோத்திரம், கிராணம், ரஸனம், த்வக் என 5-விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. வெளியில் உள்ள பிரத்யக்ஷப்பிரமாணம் இவ்விதம் ஐந்துதான். அதில் ரூபப் பிரத்யக்ஷத்திற்கு சக்ஷுரிந்திரியமும், ரஸனப்பிரத்யக்ஷத்திற்கு ரஸனேந்திரியமும், கந்தப் பிரத்யக்ஷத்திற்குக் கிராணேந்திரியமும், சப்தப்பிரத்யக்ஷத்திற்கு ச்ரோத்ரேந்திரியமும், ஸ்பருசப் பிரத்யக்ஷத்திற்கு த்வக், இந்திரியமும் ஏற்பட்டன. இவ்விந்திரியங்களில் ஒவ்வொன்றும், அந்தந்த விஷயத்தோடு சேர்ந்து அந்தந்த விஷயத்திற்கும் அந்தந்த இந்திரியத்திற்கும் சம்பந்தம் ஏற்பட்டவுடன் அந்தந்த விஷயத்தின் அறிவு ஏற்படுகிறது. அதைத்தான் பிரத்யக்ஷ ஞானமென்றும் பிரத்யக்ஷப் பிரமை என்றும் சொல்லுவார்கள். இதனுல், இந்திரியத்திற்கும் விஷயத்திற்கும் சம்பந்தம் ஏற்பட்டு அதனுல் உண்டாகும் பதார்த்தத்தின் அறிவு பிரத்யக்ஷ ஞானமென்று வெளியாகிறது. இதுதான் வெளியிலுள்ள பிரத்யக்ஷம்.

உள்ளிலும் ஒரு இந்திரியம் உண்டு. அதற்கு அந்தக் கரணம், மனது என்று பிரசித்தமான பெயர் உண்டு. அந்த இந்திரியத்திற்கும் சுகதுக்கம் முதலான விஷயத்திற்கும் சம்பந்தம் ஏற்பட்டு அந்த சம்பந்தத்தால் உண்டாகும் சுகாதிகளுடைய அறிவு ஆந்தரமான பிரத்யக்ஷப் பிரமை என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்தப் பிரத்யக்ஷப் பிரமைக்குக் காரணமான அந்தக் கரணம் அந்தரிந்திரியமென்றும், ஆந்தரமான பிரத்யக்ஷப் பிரமாணமென்றும் சொல்லப்படும்.

ஞாத சத்தாகம் என்றும் அஞ்ஞாத சத்தாகம் என்றும் பதார்த்தங்கள் இருவகைப்படும். பதார்த்தத்தின் அனுபவ காலத்தில்தான் அந்தப் பதார்த்தத்திற்கு இருப்பு, அனுபவமில்லாத காலத்தில் அந்தப் பதார்த்தத்திற்கு இருப்பு இல்லை என்று இருந்தால், அந்தப்பதார்த்தமானது ஞாத சத்தாகம் என்று சொல்லப்படும். எந்தப் பதார்த்தத்திற்கு அனுபவமில்லாத காலத்திலும், இருப்பு ஏற்படுகிறதோ, அது அஞ்ஞாத சத்தாகமான பதார்த்தம் என்று சொல்லப்படும். ஞாத சத்தாகமான பதார்த்தத்திற்கு ஸுகதுக்காதிகளே உதாஹரணமாகும், அஞ்ஞாத சத்தாகமான பதார்த்தத்திற்குக் கடபடாதிகளே உதாஹரணமாகும். ஞாதசத்தாகமான பதார்த்தமானது ஆந்தரமான பிரத்யக்ஷப் பிரமாணத்தால் சித்தமாகிறது. அஞ்ஞாத சத்தாகமான பதார்த்தமானது பாஹ்யமான பிரத்யக்ஷப் பிரமாணத்தால் சித்தமாகிறது. இதுதான் பிரத்யக்ஷப் பிரமாணத்திற்கு உதாஹரணமாகும்.

வியாப்தி ஞானமே அனுமானப் பிரமாணமாகும். எங்கே யாவது ஒரு இடத்தில் புகையைக் கண்டு அதற்குக் காரணமான நெருப்பையும் பிரத்யக்ஷமாகப் பார்த்து எங்கெங்கே புகையிருக்குமோ, அங்கங்கே நெருப்பும் இருக்கும்என்று வன்னியில், தூமஅதிகரண விருத்தித்வ ஞானமானது ஏற்படுகிறது. இதுதான் வியாப்திஞானமென்று சொல்லப்படும். இதைத்தான் அனுமானப்பிரமாணமென்றும் சொல்லுவார்கள். இந்த ஞானம் திருடமாகஇருக்

கும் பக்ஷத்தில், பிறகு, எந்த இடத்தில் புகையைக்கண்டாலும், அந்த இடத்தில் நெருப்பு இருக்கத்தான் வேண்டுமென்ற நிச்சயம் பண்ணிவிடுகிறான். அந்த நிச்சயத்தைத்தான் அனுமிதிப்பிரமை என்றும் சொல்லுவார்கள். அந்த அனுமிதிப் பிரமைக்கு முன் சொன்ன வியாப்திஞானம் அஸாதாரண காரணமாகிறபடியால், அனுமானப் பிரமாணமென்று சொல்லப்படும். மலையிலோ மற்ற இடத்திலோ புகையைப்பார்த்தவுடன் நெருப்பு இருக்கிறதென்று தீர்மானம் பண்ணுகிற இடந்தான் அனுமானப் பிரமாணத்திற்கு உதாஹரணமாகும்.

மூன்றாவது பிரமாணம், உபமானப்பிரமாணமாகும். காட்டில் கவயம்என்று ஒரு மிருகம் இருக்கிறது. அந்தக்கவயம் எப்படி இருக்குமென்றால், கோவைப்போல் இருக்கும் என்று மற்றொருவன் சொன்னால், கவயமானது கோவுக்குச் சமானம் என்று அறிவு ஏற்பட்டுவிடுகிறது. இதை ஸாதிருச்ய ஞானமென்று சொல்லுவார்கள். அதற்குத்தான் உபமானப்பிரமாணம் என்றும் பெயர். இந்த ஸாதிருச்ய ஞானத்தின் பலத்தால் எந்தவ்யக்தியில், கோவினுடைய ஸாதிருச்யத்தைப் பார்க்கிறானோ அதைக்கவயம் என்று தீர்மானித்துவிடுகிறான். அந்தத்தீர்மானத்தை உபமிதிப்பிரமை என்றுசொல்லவேண்டும். அந்த உபமிதிப்பிரமைக்கு முன்சொன்ன ஸாதிருச்யஞானம் அஸாதாரண காரணமாகிறபடியால், ஸாதிருச்ய ஞானத்தைக் கொண்டு பதார்த்த நிர்ணயம் ஏற்படுகிற ஸ்தலம் உபமானப் பிரமாணத்திற்கு உதாஹரணமாகும்.

நான்காவது பிரமாணம் சப்தப்பிரமாணமே, ஆப்தனுடைய வாக்கியமே சப்தப் பிரமாணமாகும், வெளியில் சொல்லும் அர்த்தத்தைதான் அனுபவிக்கிறவனாயும், உண்மையைச் சொல்லுகிறவனாயும் உள்புருஷன் ஆப்தனாவான். அவனுடைய வாக்கியமே சப்தப்பிரமாணமாகும். ஒரு ஜீவனைப்பார்த்து, நீ பிரம்மன்தான்' என்று ஒரு மஹாபுருஷன் சொல்லுகிறான். பிறகு அந்த ஜீவனுக்குத்தான் பிரம்மம்என்ற அனுபவம் ஏற்படுகிறது அந்தஅனுபவம்

தான் சாப்த போதமென்றும் சாப்தப்பிரமை என்றும் சொல்லப் படும். அந்தப்பிரமைக்கு முன் விளக்கிய ஆப்தனுடைய சப்தம் அஸாதாரண காரணமாகிறபடியால், அந்த சப்தந்தான் பிரமாண சப்தமாக ஆகும். ஒரு குருவானவன் சிஷ்யனைப்பார்த்துப் "பசுவைக்கொண்டுவா" என்று சொன்னவுடன் அவன் பசுவைக்கொண்டு வருகிறான். அந்த இடம் சப்தப்பிரமாணத்திற்கு உதாஹரணமாகும்.

ஐந்தாவது பிரமாணம் அர்த்தாபத்திப் பிரமாணமாகும். ஒரு தேவதத்தன் யோகியைப்போல் வேஷம் போட்டுக்கொண்டு பகலில், ஜனங்களுக்கு எதிரில், சாப்பாடு முதலான வ்யவகாரங்களை செய்யாமல் இருக்கிறான். ஆனால் அவனே நாளுக்குநாள் பருமனைகவே ஆகிறான். அந்தப்பருமன் பீனத்வம் என்று சொல்லப் படும். அந்தப்பீனத்வமானது சாப்பாடு இல்லாதுபோனால் சம்பவிக்காது. சாப்பாடு இல்லாதுபோனால், பீனத்வம் ஏற்படாது என்றதே அர்த்தாபத்திப் பிரமாணமாகும். அதைக்கொண்டு அந்த தேவதத்தன் ஜனங்களுக்குத் தெரியாமல், ராத்திரியில், போஜனம் செய்கிறான்என்றதைத் தீர்மானிக்கிறோம்; அந்தத் தீர்மானத்தை அர்த்தாபத்திப்பிரமைக்குப் "பீனத்வ அன்யதா அனுபபத்தி" என்றது அஸாதாரண காரணமாகின்றபடியால், பீனத்வ அன்யதா அனுபபத்தி என்றதை அர்த்தாபத்தி பிரமாணமாகச் சொல்லுவார்கள். சாப்பிடுகிறதில்லைஎன்று வெளிக்கு வேஷம் போட்டுக் கொண்டும், தினந்தோறும், பெருக்கிறனே அத்தப்புருஷன்தான் அர்த்தாபத்திக்கு உதாஹரணமாகும்.

ஆறுவது பிரமாணம் அனுபலப்தியாகும் பாவம் அபாவம் என்று பதார்த்தம் இருவகைப்படும். "இருக்கிறது" என்ற சப்தத்தாற் சொல்லப்படும் பதார்த்தம் பாவபதார்த்தமாகும். "இல்லை" என்ற சப்தத்தாற் சொல்லப்படும் பதார்த்தமானது அபாவபதார்த்தமாகும். மேற்சொல்லிய 5-விதமான பிரமாணங்களும் பாவ பதார்த்தங்களின் அறிவுக்காக ஏற்பட்டவை. அனுபலப்திஎன்ற

ிரமாணத்தால் அபாவபதார்த்தத்தின் அறிவு ஏற்படும். உப
ப்தி என்றால் பிரத்யக்ஷம்என்று அர்த்தம். அனுபலப்தி என்றால்
ிரத்யக்ஷமில்லாதிருத்தல் என்றதே. வெள்ளையானை இருக்கிறதா
இல்லையாஎன்ற சந்தேஹம்வர வெள்ளையானை இல்லைஎன்று தீர்மா
ிக்கிறோம். அதாவது வெள்ளையானையின் அபாவத்தைச்சாதிக்
ிறோம். அந்த வெள்ளையானையின் அபாவத்தில்என்ன பிரமாணம்
ன்றாலோ வெள்ளையானையின் அனுபலப்திதான். வெள்ளையானை
இருந்தால், புலப்படட்டும். புலப்படாததினால், வெள்ளையானை
இல்லைஎன்று வெள்ளையானையின் அனுபலப்தியைக் கொண்டு வெள்
ளையானையின் அபாவத்தைச் சாதிக்கின்றோம். வெள்ளையானையின்
அபாவ நிச்சயமானது அனுபலப்திப் பிரமைஎன்று சொல்லப்படும்.
அந்தப்பிரமைக்கு, வெள்ளையானையின் அனுபலப்தி அஸாதாரண
காரணமாகிறபடியால், வெள்ளையானையின் அனுபலப்தியை ஓர் பிர
மாணமாகச் சொல்லுவார்கள். பிரத்யக்ஷமாகப் புலப்படாதகார
ணத்தால், அபாவத்தைச் சாதிக்கிற இடமே இதற்கு உதாஹரண
மாகும்.

இப்படிப்பிரத்யக்ஷம் முதல், அனுபலப்தி உள்பட ஆறு
விதப்பிரமாணங்களுக்குள் முதலாவதான பிரத்யக்ஷமே, அவித்தை
யின்ஸத்வத்திற்குப் பிரமாணமாகும். சகலப்பிராணிகளுக்கும் நான்
மூடன், நான் ஒன்றும் தெரியாதவன், என்ற அனுபவமோ பிரத்
யக்ஷமாக இருந்துவருகிறது. இந்த அனுபவத்தால் அவித்தையல்
லவா பிரகாசிக்கின்றது. அந்த அவித்தையும் தூலாவித்தை, மூலா
வித்தை, என் று இருவகைப்படும். எனக்கு கடம் தெரியாது
படந்தெரியாது என்று தெரியாத விஷயத்தைக் குறிப்பிட்டுச்
சொல்லிக்கொண்டு ஏற்படும், அனுபவத்தால் பிரகாசிக்கும் அவித்
தையே தூலாவித்தையாகும். எனக்கு ஒன்றுமே தெரியாது
என்று தெரியாத விஷயத்தைக் குறிப்பிடாமல், பொதுவாகவே
சொல்லிக்கொண்டு ஏற்படும் அனுபவத்தில் பிரகாசிக்கும் அவித்தை
யே மூலாவித்தையாகும். இவ்விதம் மூலரூபமாகவோ தூலரூபமாக

வோ இருக்கும் அவித்தையின் ஸத்வத்தில் "நான் மூடன்" என்றது முதலான பிரத்யக்ஷமே பிரமாணமாக இருப்பதினால், அவித்யாதத்வம் பிரமாண சித்தமாகவும் ஆகிவிட்டது. முன்சொல்லியபடி லக்ஷணத்தால் லக்ஷிதமாயும் ஆகிவிட்டது. இவ்விதம் லக்ஷணமும் பிரமாணமும் அவித்தைக்குப் பிரசித்தமாக இருப்பதினால், இந்த அவித்தையின் ஸ்வரூபம் நிலைத்தது இந்த அவித்தையினுடைய ஸ்வரூபத்தைத் துர்யோதனனுடைய பிரசங்கத்தாலும் அர்ஜுனனுடைய பிரசங்கத்தாலும் வெளியிட்டோம்.

இந்த அவித்தையை நிவிருத்தி செய்துகொள்ளுவதற்காக ஏற்பட்ட உபாயம் வித்தையே ஆகும். பாண்டவர்களுடைய சேனைக்குச் சிரோரத்னம்போல், பிரகிருதத்தில் விளங்கிவந்தாலும், உண்மையில், சகல ஜகத்திற்கும் மூலகாரணமான பிரம்மமாகிய "ஸ்ரீ கிருஷ்ணனைத்தான்" என்று அறியும்அறிவே வித்தையாகும். இந்த வித்தைகுருவினுடைய உபதேசத்தால்தான் ஏற்படும். குருவின் உபதேசத்தால் ஏற்படும் இந்தவித்தையும் பரோக்ஷம் அபரோக்ஷம் என்று இருவகைப்படும். பரோக்ஷமான வித்தையோ அபரோக்ஷமான வித்தையோ, இரண்டுவிதமான வித்தைக்கும் அவித்தையை நிவிருத்திசெய்து வைப்பதில் சாமர்த்தியம்உண்டு. புருஷகதமான அவித்தை விஷயகதமான அவித்தைஎன்று அவித்தையும் இருவகைப்படும். ஒருமனிதனுடைய கண்ணைக்கட்டிவிட்டால் அந்தமறைவு மனிதனை ஆசிரயித்த மறைவாகஆகிறது. அந்த மறைவு எதிரில் பதார்த்தம் இருக்கும்பொழுதே ஒன்றுமே இல்லைஎன்று சொல்லும்படி பண்ணும். மனிதனுடைய கண்ணைக்கட்டாமல், எதிரிலுள்ள பதார்த்தத்தை ஒரு கம்பளியினால் மூடிவிட்டால், அந்த ஆவரணத்தை விஷயத்தை ஆசிரயித்த ஆவரணம்என்று சொல்வது வழக்கம். இது பதார்த்தத்தை இல்லைஎன்று செய்யாது. இருக்கும் பதார்த்தத்தைப் பிரகாசிக்காமல் செய்யும், இந்த அவித்தையின் பிரிவானது அஸத்வாபாதகம் அபானுபாதகம்என்றும் முன்விவரிக்கப்பட்டு இருக்கிறது. இதுபோல், ஜீவனை ஆசிரயித்துக்கொண்டு ஒரு

அவித்தை பிரம்மத்தை இல்லையென்று பண்ணுகிறது. இதுதான் புருஷகதமான அவித்தை. மற்றொரு அவித்தை பிரம்மகதத்தையே ஆசிரயித்துக்கொண்டு அந்த பிரம்மத்தை இல்லையென்று பண்ணுது போனாலுங்கூட அந்த பிரம்மத்தை ஜீவனுக்குப்பிரகாசிக்காமல் செய்கிறது. இதுதான் விஷயகதமான அவித்தை,

பரோக்ஷவித்தையானது புருஷகத அவித்தையை நிவிருத்தி செய்துவிடும். ஜகத் பொய் பிரம்மம் ஒன்றே சத்தியம், அதுவே நான்என்ற திருடநிச்சயம் உள்ள பரோக்ஷஞானிகளுக்கு பிரம்மம் இல்லையென்ற நாஸ்திக்யம் எற்படுமா? அப்படி எற்படாததற்கு அவர்களுடைய பரோக்ஷவித்தையால் புருஷகதமான அவித்தை நிவிருத்தியாகி இருப்பதேதான் காரணமாகும்.

அபரோக்ஷவித்தையினால் விஷயகத அவித்தையின் நிவிருத்தி எற்படுகிறது. சிலவித்வான்களுக்கு நான் பிரம்மம்என்ற வித்தை அபரோக்ஷமாக எற்படாத காரணத்தால்தான் விஷயகதமான அவித்தைக்கு நிவிருத்திவாரமலும், பிரம்மப் பிரகாசமில்லாமலும், அவித்வான்களைப்போல் இருந்துவரும்படி நேரிடுகிறது. அபரோக்ஷமென்றால், பிரத்யக்ஷமென்பது அர்த்தம். பரோக்ஷமென்றால் அப்பிரத்யக்ஷம் என்பது அர்த்தம். பரோக்ஷமாகவோ அபரோக்ஷமாகவோ எவ்விதமானாலும் அந்த வித்தையானது அவித்தையை நிவிருத்தி பண்ணுகிறபடியால், அவித்யா நிவிருத்தியில் வித்தைதான் அந்தரங்கமான உபாயமாகும். கர்மா முதலான சாதனங்களால் அவித்யாநிவிருத்தி எற்படாது. அந்த கர்மாக்களுக்கும் அவித்தை ஆசிரயமானதினால் தனது ஆசிரயமான அவித்தையைக் கர்மா நிவிருத்தி செய்கிறது என்றதும் காரணமாகாது. மனதில் வித்தையானது உதிக்க நைர்மல்யமானது அபேக்ஷிக்கப்படுகிறபடியால், அந்த மனதினுடைய நைர்மல்யத்திற்கே கர்மா முதலான சாதனங்கள் எற்பட்டதேதவிர அவித்யா நிவிருத்தியில் கர்மாக்களுக்கு உபயோகமே இல்லை. அவித்யாநிவிருத்தி வித்தையினாலே

தான் உண்டாகும். இந்த வித்தையும் இந்த அத்தியாயத்தில், சூசிப்பிக்கப்படுகின்றது.

அர்ஜுனனுக்கு பீஷ்மர் முதலான பேர்களோடு யுத்தம் பண்ணினால், நாம்ஜயிப்போமோ ஜயிக்கமாட்டோமோ என்ற சம்சயமேஇல்லை. அல்பமான ராஜ்யத்திற்காகப் பூஜ்யர்களான பீஷ்மர் முதலானவர்களை வதம் பண்ணினால், தர்மத்திற்குக்குறைவு வருமோ என்று பயந்தான். இஹலோகத்தில் ஜயத்தை அடைவதில் யாதொரு சம்சயமும்இல்லை. ஆனால் கௌரவர்களுடைய சேனையில், தன் சேனாபலத்தைக் காட்டிலும் அதிகமான சேனாபலம் இருந்தும், கௌரவர்களுடைய சேனாபலத்தைக்காட்டிலும், தன்னுடைய சேனாபலம் எவ்வளவோ அம்சத்தில் குறைந்ததுஎன்ற நிச்சயம் இருந்தாலும், தான் ஜயிப்போம் என்ற நிச்சயம் அர்ஜுனனுக்கு ஏற்பட்டதற்குப் பகவானுடைய ஆசிரயம் தனக்குஇருக்கிறது என்ற எண்ணந்தான் காரணமாகும். சகலமான ஜகத்தும் ஒரு கக்ஷியிற் சேர்ந்துகொண்டாலும், நான்ஒருவனாக இருந்தாலும் கிருஷ்ணனுடைய சஹாயம் நமக்கு இருந்தால் நாம் நிச்சயம் ஜயிக்கலாம் என்ற நிச்சயம் உள்ளவனாகவே அர்ஜுனன் ஆவான். இதனால், கிருஷ்ணன் மனிதனல்ல, சர்வஜகத்திற்கும் மூலகாரணமான பரமாத்மா என்ற அறிவு அர்ஜுனனிடத்தில் இருப்பதாகத்தெரிய வருகிறது. இந்த விஷயத்தை ஆலோசிக்கும் சமயத்தில், அவித்தையை நிவிருத்தி பண்ணுகிற வித்தையும் சூசிப்பிக்கப்படுகிறது.

அவித்யாகாரணமான அந்தக்கரணத்தை நிக்ரஹம் செய்துகொள்ளவேண்டுமென்று சொல்லவேண்டிய சந்தர்ப்பமாகிய இரண்டாவது அத்தியாயத்தில், அந்தக்காரணத்தின் ஆசிரயமான அவித்தையை நிவிருத்தி செய்துகொள்ளாமல், அந்தக்கரணத்திற்கு ஸ்வரூபநாசம் ஏற்பட நியாயமில்லாததால், அவித்யா நிவிருத்தியும் பிரசக்தமாக ஆகி அந்த அவித்தையை நிவிருத்திபண்ணும், உபாயமான வித்தையை விவரித்து அதின் தத்வத்தைப்பிரகாசப் படுத்தப்படும்.

இவ்விதம் அவித்தை அந்தக்கரணம், கர்மயோகம், சந்நியாசம், ஜீவன் கூடஸ்தன்என்ற 6-தத்வங்களையும் உள் அடக்கிக் கொண்ட த்வம்-என்ற பதத்தை மூலசுருதியாக அபேக்ஷித்து ஏற்பட்ட கீதையின் பிரதமஷட்கத்தில், அந்த ஆறு தத்வங்களையும் வரிசையாகப் பிரகாசப்படுத்த வேண்டியது அவசியமானதினுல், அதை அனுசரித்து முதல்தத்வமான அவித்தை முதலாவதான இந்த அத்தியாயத்தில் முன்விவரித்தபடி பிரகாசப்படுத்தப்பட்டது.

முதலாவது அத்தியாயம் முற்றிற்று.



# ஸ்ரீ ஜெகத் குரு ஆதி சங்கராசார்ய ஸ்வாமிகளின் ஜீவிய சரித்திரம்.

---

அமிருதபானம் பண்ணுகிறவர்கள் அமராளாக ஆகிறார்கள் என்றது லோகத்திலும் வேதத்திலும் பிரஸித்தமானது அந்த அமிருதமும் லௌகீகம், வைதிகம் என இரண்டு வகைப்படும். தேவாளும் அசுராளும் ஒரு காலத்தில் ஒருவருக்கொருவர் மிகுந்த சிநேகத்தை அநுஷ்டித்துக்கொண்டு மஹாவிஷ்ணுவின் உதவியால் பால் கடலில் மந்தா பர்வதத்தை மத்தாக வைத்துக்கொண்டு வாசுகியென்ற சர்ப்பராஜனைக் கடையும் கயிறாக வைத்துக்கொண்டு வால் பக்கத்தை தேவர்களும் தலைப்பக்கத்தை அஸுரர்களுமாக இழுத்துக்கடைந்து அமிருதத்தை உண்டுபண்ணினார்கள் என்றது புராணங்களில் பிரஸித்தமான கதையாகும் மகாவிஷ்ணுவும் ஆமையின் ரூபத்தை எடுத்துக்கொண்டு மத்தாகிய மந்தரபர்வதம் கடலுக்குள் அமுங்காமலிருப்பதற்காக தனது முதுகால் அந்த மந்தாபர்வதத்தை தூக்கித்தாங்கிக்கொண்டு உதவிபுரிந்தார். அமிருதம் உண்டான பிறகு தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் அந்த அமிருதத்தை சாப்பிடும் விஷயத்தில் நாங்களே முந்தி நாங்கள்தான் முந்தியென்று பலவிதமாக கலஹம்செய்துகொண்டு பெரிய போர் எற்படும்போல் தோன்றின சமயத்திலும் மகாவிஷ்ணுவானவர் மோகினி என்ற பெயரோடுகூடின அழகான ஒரு ஸ்திரீ ரூபத்தை எடுத்துக்கொண்டு தனது சருங்கார லீலைகளால் அஸுரர்களை மயக்கி தேவர்களுக்கு மாத்திரம் அந்த அமிருதத்தை சாப்பிடும்படியான உதவிபுரிந்து மறைந்திருந்தார் என்றதும் புராணத்தில் பிரஸித்தமானது.

இவ்விதம் தேவர்களிடத்தில் அதிகமான பக்ஷபாதத்துடன் கூடின மகாவிஷ்ணுவானவர் தேவர்களுக்கு அமிருதத்தைக் கொடுத்து அவர்களை அமராளாக செய்யும் காலத்தில் இந்த பூலோகத்தி

ளுள்ள பூதேவர்களேயும் அமரர்களாக செய்யவேண்டும் என்ற நினை வையே அடையவில்லே. உண்மையில் ஸுரர்களேக்காட்டிலும் பூஸுரர்கள் மகாவிஷ்ணுவை ஸத்கர்மாக்களால் ஆராதிப்பதில் சிறந்தவர்கள், தேவலோகத்திலோ மகாவிஷ்ணுவை ஆராதிப்பதற்கு வேண்டிய சாமக்கிரியைகளே அகப்படுவது அசாத்தியமானதினல் தேவர்கள் பூதேவர்களேப்போல் உபவாஸ விருதாதிகளால் மகாவிஷ்ணுவை ஆராதிக்கிருர்கள் என்றது இல்லே. பூலோகத்திலோ ஒவ்வொரு பூதேவனும் அக்கினிஹோத்ரம் முதலான கர்மாக்களாலும் சாதன சாத்யபக்திகளாலும் ஒவ்வொருதினத்திலும் மகாவிஷ்ணுவை பூஜித்துக்கொண்டு பரமபக்தர்களாக இருந்துவருகிருர்கள். இவ்விதமிருக்க இந்த பூதேவர்களுக்கு அமிருதத்தைக்கொடுத்து இவர்களே அமரர்களாகச் செய்வதற்காக அந்த மகாவிஷ்ணுவானவர் தனிபாக யத்னம் செய்யாமற்போனுலும் தேவர்களுக்கு உபகாரம் பண்ணின காலத்திலாவது அந்த அமிருதத்தில் கொஞ்சம் மிச்சம்பிடித்து பூதேவர்களுக்கும் கொடுத்து உபகரிக்கக்கூடாதா? இந்த பூதேவர்களிடத்தில் மகாவிஷ்ணுவுக்கு இவ்வளவு த்வேஷம் வருவதற்குக் காரணம் என்ன என்று நாரதமகரிஷியானவர் மிகவும் கவலேயை அடைந்தார். உடனே கைலாசம் சென்று பரமேச்வரனிடத்தில் இந்த விருத்தாந்தத்தைச்சொல்லி வருத்தமடைந்தார்.

பரமேச்வரனும் ப்ராமணுள் என்ற பூதேவாள் ருத்ரனென்ற பரமேச்வரனேயேதான் ஜாதிக்குரிய அதிதேவதையாக ச்ருதியில் முறையிடப்படுகிறபடியால் அதையநுஸரித்து பூஸுரர்களுடைய க்ஷேமவிஷயமாக பரமேச்வரனுன நான்தான் கவலேயை அடைந்து யத்தனம்பண்ண வேண்டும். தேவாள் க்ஷத்திரிய ஜாதியில் சேர்ந்தவர்கள். மகாவிஷ்ணுவும் க்ஷத்திரியதேவதையே. அந்தந்த ஜாதிக்குரியதேவதை அந்தந்த ஜாதியை முன்னேற்றத்திற்கு கொண்டுவர முயற்சிப்பது உசிதம்தானே. பூஸுரர்களே மகாவிஷ்ணுவானவர் எதற்காக கவனிக்கவேண்டும் அந்தபாரம் என்னேச்சேர்ந்தது மிகவும் சீக்கிரத்தில் தேவர்கள் பானம்பண்ணின அமிருதத்தைக்காட்

டிலும் மிகவும் சிரேஷ்டமான அமிருதத்தை பூஸுரர்களுக்கு நான் கொடுத்து எப்பொழுதும் பிறப்பு இறப்பு அற்றவர்களாக செய்கிறேன் என்று தான் சொல்லி பகவான் பரமேச்வரன் நாரதமஹரிஷியை சமாதானப்படுத்தினர்.

விஷ்ணுவினுடைய உதவியால் தேவர்களுக்கு கிடைத்த அமிருதமேதான் லௌகீக அமிருதமாகும் பரமசிவனால் பூசுரர்களுக்குக் கிடைத்த அமிருதமேதான் வைதீக அமிருதமாகும். வைதிகாமிருதம் என்பதைத்தான் அத்வைதாமிருதம் என்று வேதாந்திகள் சொல்லுவார்கள். இந்த அத்வைதாமிருதத்தைத்தான் பூஸுரர்களுக்கு மிகவும் சீக்கிரகாலத்தில் கொடுப்பதாக பரமேச்வரன் நாரதமஹரிஷியின் முன்பாக பிரதிக்ஞை செய்தார். அந்த பிரதிக்ஞையை அநுஸரித்து உடனே இந்த பூமண்டலத்தில் அப்ராகிருதமான திவ்யமங்கள விக்ரஹத்தோடு மனுஷ்ய வடிவாக பகவான் பரமேச்வரன் அவதரித்தார். அவதரித்தவுடன் அத்வைதாமிருதத்தை எடுக்கும் கடலையும் ஆலோசிக்க லோகத்தில் பிரஸித்தமான பால்கடல் பிரயோஜனமற்றது என்று தள்ளிவிட்டு வேதமாகிய பெருங்கடலை இந்த அத்வைதாமிருதத்தை எடுக்க உபயோகமான கடலாகும் என்று தீர்மானித்தார். அவ்விதமான வேதமாகிய கடலுக்குள் முழுகி விலையில்லாத மாணிக்கம்போலொத்த தத்வார்த்தங்களை வெளியில் பிரகாசப்படுத்துவதில் ஊர்த்வரேதஸ் என்ற சப்தத்தால் சொல்லப்பட்ட ஆச்ரமத்தை அங்கீகரித்த ஸந்நியாஸிகளுக்குத்தான் அதிகாரம்உண்டு என்றதை அறிந்து தானும் அவ்விதமே அதிபால்யத்திலேயே ப்ரம்மசர்ய ஆச்ரமத்திலே நின்றும் துரியாச்ரமத்தையும் ஸ்வீகரித்துக்கொண்டு பூஸுரர்களுடைய க்ஷேமத்திற்காக அத்வைதாமிருதத்தை எடுக்க யத்னம் செய்தார். இந்த அமிருதத்தை எடுக்கும் கடல் வேதம்தானென்று முன்சொல்லப்பட்டது. கடலில் எவ்விதம் அநேக ரத்தினங்கள் உள்ளனவோ ஆழமும் அகாதமோ ஒரு சமயத்திலும் அந்த கடலுக்கு விருத்தி குறைவு என்ற விகாரமில்லாமல் ஒரே நிலைமையாக

இருக்கும் தன்மையும் பிரஸித்தமே அதுபோல் வேதத்தையும் அநேக ரகஸியமான ரத்தினம்போலொத்த அர்த்தங்கள் அடங்கியிருக்கும் காரணத்தாலும் அந்த வேதத்திற்கு இன்ன அர்த்தத்தில்தான் தாத்பர்யம் என்றது கண்டுபிடிப்பது யாருக்கும் அஸாத்தியமாயிருக்கும் காரணத்தாலும் அடிக்கடி கல்பம் புரண்டாலும் அந்த வேதத்திற்கு விருத்தி க்ஷயமில்லாமல் ஒரே ரூபமாக இருக்குங்காரணத்தாலும் இந்த வேதத்திற்கு கடலை உபமானமாகச் சொல்லி வேதத்தை கடலாகவே நிரூபணம் செய்யப்பட்டிருக்கிறது.

அந்த வேதமாகிய கடலில் பூமண்டலத்தில் பிராணிகளுக்கு உபகாரமாக அவதரித்து ஸன்னியாஸத்தையும் ஸ்வீகரித்துக் கொண்டு இரண்டுகண்ணுள்ள பரமசிவனுக விளங்கிவரும் பகவான் தனது பெரிதான மனதையே மத்தாக மந்தா பர்வதத்தின் ஸ்தானத்தில் வைத்துக்கொண்டார். விசாரத்தை கடையும் கயிறன வாஸுகியின் ஸ்தானத்தில் வைத்துக்கொண்டார் அத்வைதஸித்தாந்தத்திற்கு விரோதிகளான த்வைதிகள் முதலான பூர்வ பக்ஷிகளே அஸுரர்களாக ஆகுவார்கள். மனதாக மந்த்ர பர்வதத்தை வேதமாகிய கடலில் ஸ்தாபனம் செய்து விசாரமாக வாஸுகியைச் சுற்றிக்கட்டி தேவர்களாகிய வேதாந்திகள் வால் பக்கத்திலும், பூர்வ பக்ஷிகளாகிற அஸுரர்களை தலைப்பக்கத்திலும் இழுக்கச்செய்து அத்வைதாமிருதத்தைக் கடைந்தெடுத்தார். ஸர்வ ஜகத்தும் பொய் யென்ற நிச்சயம் திருடமாக எற்பட்டு அந்த ஸர்வ ஜகத்துக்கும் மூலகாரணமான பரப்ரம்மம் ஒன்றுதான் சத்தியம். அந்த பிரம்மமேதான் என்றதான திருட ஞானத்தை அடைவதுதான் அத்வைதாமிருத பானமென்று சொல்லப்படும். இந்த திவ்ய ஞானமும் வேத மூலமாயும் ஆசார்யனுடைய அநுக்ரகத்தாலும் பூர்வ பக்ஷ ஸித்தாந்த ரூபமான விசாரத்தாலும் எற்பட வேண்டியிருப்பதால் இந்த வேதம் முதலானசாதனங்களை கடல்முதலானதுகளைப்போல் வர்ணிக்கப்பட்டது இந்த அத்வைதாமிருதமானது பிராணிகளை எக்

காலத்திலும் ஜனன மரணமற்றவர்களாகச் செய்து நித்யமான ஆநந்தத்தை அநுபவிக்கும்படியான பதவியையும் கொடுத்து பரப்ரம்மமாகவே செய்துவிடும். இந்த அமிருதத்திற்கு மேலான அமிருதமேகிடையாது. விஷ்ணுவினுடைய உதவியால் தேவர்களால் புஜிக்கப்பட்ட அமிருதமும் ஸாபேக்ஷிகமான அமிருதம். அதாவது கொஞ்சம் அதிகநாள் வரையில் ஜனனமரணம் அடிக்கடி வாராமல் பண்ணுமே தவிர ஜன்மமரணமேயில்லாமற் செய்யாது. இந்த அத்வைதாமிருதமோ நிரபேக்ஷமான அமிருதம். இதை பானம் பண்ணினவனுக்கு ஜன்மமரணமேகிடையாது இவ்விதம் உத்கிருஷ்டமான இந்த அத்வைதாமிருதத்தை பூலோகத்திலுள்ள ஸகலபிராணிகளும் அதிலும் பூஸுரர்கள் முக்கியமாய் பானம் செய்து முக்தர்களாக ஆகவேண்டும், என்ற பரமகருணையால்தான் மகாகைலாஸத்திற்கு அதிபதியான பரமேச்வரன் பூமண்டலத்தில் ஸ்ரீ சங்கரபகவத் பாதரூபமாக அவதாரம் செய்தார். அந்த அவதாரகாலத்தில் உள்ளஸுக்ருதிகளுக்குத்தான் நேராகவே அத்வைதாமிருதத்தை கொடுத்து உபகரித்து பரம அநுக்ரகம் செய்ததோடுங்கூட பிறகு எக்காலத்திலும் இந்த அத்வைதாமிருதம் இந்த பூமண்டலத்திலும் மற்ற லோகங்களிலும் பரவி பிரஸித்தி அடைவதற்கு தகுந்த அதிகாரிகளாக தனது சிஷ்ய கோடிகளில் சிலமஹான்களை பொறுக்கி எடுத்து நான்கு வேதங்களையும் அநுஸரித்து நான்கு மடங்களை ஸ்தாபனம் பண்ணி அதுகளில் முன்சொன்னபடி பொறுக்கி எடுத்த நாலு சிஷ்யர்களையும் ஸ்தாபானம்செய்து அவர்கள்மூலம் அந்த அத்வைதாமிருதத்தை சந்திரன் சூரியன் உள்ளவரையிலும் லோகத்தில் பரவச்செய்யவேண்டுமாகவும் ஆக்ஞாபித்தார். அத்துடன் தானும் அநேகப்பிரபந்தங்களை நிர்மாணம் செய்து. அந்த பிரபந்தங்களாகிய அமிருதகலசங்களில் மேல்சொன்ன அத்வைதாமிருதத்தை ரொப்பி அந்தகலசங்களையும் கோப்யமாகவும் செய்து காலாந்தரங்களில் பிராணிகளுக்கு உபயோகப்படட்டும் என்றும் உபகரித்தார். இவ்விதம் கைலாஸத்திற்கு அதிபதியான

பரமேச்வரன் தான்பூலோகத்தில் சங்கரபகவத்பாதாளாக அவதாரம் செய்தார். அப்படி அவதாரம்பண்ணினதற்கும் வேதமாகிய கடலி லிருந்தும் ஜீவப்ரம்ம ஐக்கிய ஞானமாகிய அத்வைதாமிருதத்தை எடு த்து பூமண்டலத்திலுள்ள பிராணிகளுக்கு கொடுத்து அந்தப்பிராணி களை முக்தர்களாகச்செய்ய வேண்டுமென்று அந்த பரமேச்வரனு டையமனத்தில் உதித்த. அபாரமானகருணையேதான் காரணமாகும்.

அவ்விதம் பரமேச்வரன் மனதில்கருணை உதிக்கவும் மகா விஷ்ணுவானவர் தேவர்களிடத்தில் பக்ஷபாதத்துடன் பால்கடலி லிருந்து எடுத்தஅமிருதத்தை தேவர்களுக்குகொடுத்து அஸுரர் களை உபேக்ஷித்ததேதான் காரணமாகும். இதுவும் பரமேச்வரன் சங்கரபகவத்பாதரூபமாக பூமண்டலத்தில் அவதாரம் செய்ததற்கு ஒருகாரணமாகும் மற்றொரு காரணமுமுண்டு. அதாவது பிராணி களால் விரும்பப்படும் சுகமானது ச்ரேயஸ், ப்ரேயஸ் என்று இருவ கப்படும் ச்ரேயஸ் என்றால் மோக்ஷசுகமே, ப்ரேயஸ் என்றால் ஸ்வர்க் காதிசுகமே. அவ்விதமான இரண்டுசுகங்களுக்குள் மோக்ஷசுகத்தை அடைவதற்கு ஆத்மஞானம் உபாயமாக ஏற்பட்டிருக்கிறது. ஸ்வர்க்கசுகத்தை அடைவதற்கு வர்ணாச்ரமதர்மமானது உபாயமாக ஏற்பட்டிருக்கிறது. இவ்விதம்பிராணிகள் நன்மையை அடைய ஞானமார்க்கம், கர்மமார்க்கம் என்று இரண்டுவிதமான மார்க்கம் தான் சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கின்றன. இந்த ஞானமார்க் கத்தை பூமண்டலத்தில் பாவச்செய்து ஸம்ரக்ஷிப்பதற்காக பகவா னைசர்வேச்வரன் ஸனகாதி முனிகளை சிருஷ்டித்து மேல் சொன்ன ஞானமார்க்கத்தைப் பரிபாலனம் செய்துவரும்படி அந்த ஸனகாதி முனிகளை ஆக்ஞாபித்தார். அப்படியே கர்மமார்க்கத்தையும் பாவச் செய்து ஸம்ரக்ஷிப்பதற்காக மரீசி முதலான ஒன்பது விதமான பிர ஜாபதிகளை சிருஷ்டித்து அவர்கள் மூலம் கர்மமார்க்கமானது நிலைக் கும்படி செய்தார். பகவானன பரமேச்வரனுடைய ஆக்ஞையை யும் அநுஸரித்து ஸனகாதிகளான மகரிஷிகளும், மரீசி முதலான

பிரஜாபதிகளும் தங்கள் தங்கள் காரியத்தை சரியாகச் செய்து கொண்டு ச்ரேயோமார்க்கத்தை பரிபாலனம்செய்து வந்தார்கள்.

இவ்விதமிருக்க ஸனகாதிகளான மகாமுனிகள் தங்களுக்கு எற்பட்ட பரமேச்வரனுடைய ஆக்ஞாரூபமான மோக்ஷத்தை அடைவதற்கு அந்தரங்க சாதனமாயுமுள்ள ஞானமார்க்கத்தை பரிபாலனம் செய்து வருவதில் ரொம்பவும் உத்ஸாகமுள்ளவர்களாக இருந்தாலும் கலிதோஷத்தால் சகல பிராணிகளும் மூடப்பட்டு மோக்ஷ சாதனமான ஞானத்தை அடையவேண்டுமென்ற ஆசையே இல்லாதவர்களாக அனகாரணத்தைக்கொண்டு ஞானமார்க்கத்தில் சிரத்தையானது ஒரு மனிதருக்குக்கூட எற்படவில்லை அதாவது ஞான மார்க்கத்தை ஆதரிக்கிறவர்களே துர்லபமாக ஆகிவிட்டது. இவ்விதம் ஞானமார்க்கத்தை ஆதரிக்கும் ஜனங்கள் துர்லபமாக ஆனதினால் ஸனகாதி மகாமுனிகளும் மனதிற்கு திருப்தியில்லாதவர்களாய் கொண்டு இந்த லோகத்தில் கலியினுடைய பிரவேசத்தால் பிராணிகள் ரொம்பவும் பாபிகளாக ஆகிவிட்டார்கள். இவர்களுக்கு ஞானோபதேசம் பண்ணுவதில் பிரயோஜனமேயில்லை. ஞானமார்க்கத்தில் இவர்களுக்கு அதிகாரமும் கிடையாது. ஆகையால் நாம் லோகத்தை ஞானோபதேசத்தால் ரக்ஷிக்கவேண்டுமென்று நினைப்பது அசாத்தியமான காரியம் என்று நினைந்து அந்த மகரிஷிகள் இந்த உத்தியோகத்தினின்றும் ஒழிவை அடைந்துவிட்டார்கள். அவ்விதம் ஸனகாதிகள் ஒழிவடைந்த நிமித்தமாயும் கலி பிரவேசத்தால் பிராணிகள் அநதிகாரிகளாக ஆனகாரணத்தாலும் ஞானமார்க்கத்தில் பிராணிகளுக்கு சஞ்சாரமில்லாமல் ஆகி ஞானமார்க்கம் ரொம்பவும் மலினமாக ஆகிவிட்டது. ஆனால் கர்மமார்க்கமாவது சரியாக இருந்ததோ என்றால் அதுவுமில்லை. இக்கலியின் பிரவேசமானது பிராணிகளுக்கு ஸத்கர்மாக்களில் பிரவிருத்தியையும் தடுத்துவிட்டது சகல ஜனங்களும் பாபாசாரதத்பராளாகவே கலியின் மகிமையால் இருந்துவரும்பொழுது சத்கர்மாக்களில் பிரவிருத்தி எப்படி வரும். அந்த கர்மமார்க்கத்தைப் பரிபாலனம் பண்ணுவதற்காக எற்பட்ட

மரீசி முதலான மகரிஷிகளுக்கும் இனி இந்த பூமண்டலத்தில் தர்ம பிரசாரம் பண்ணுவதும் அசாத்தியமான காரியம்தான் என்று தோன்றி அவர்களும் ஸனகாதிகளைப்போலவே ஒழிவடைந்துவிட்டார்கள். அக்காரணத்தால் கர்மமார்க்கமும் மலினமாக ஆகிவிட்டது. ஞானமார்க்கம், கர்மமார்க்கம் இரண்டும் பிராணிகள் சஞ்சாரமில்லாத காரணத்தால் மலினமாகப் போனதினால் ஞானமார்க்கத்தால் அடையவேண்டிய மோக்ஷமும் கர்மமார்க்கத்தால் அடையவேண்டிய ஸ்வர்க்கமும் அநுபவிக்கிற போக்தா இல்லாத காரணத்தால் மலினமாக ஆகிவிட்டது. ஸ்வர்க்கத்தை அடைகிறதற்கே மனிதர்கள் இல்லாமலிருக்கும் பொழுது மோக்ஷத்தை அடைவதற்கு அதிகாரி எது. இவ்விதம் சாஸ்திரத்தில் கூறிய ஞானமார்க்கத்தையோ கர்மமார்க்கத்தையோ பிராணிகள் ஆதரியாமலிருப்பதோடுங்கூட கலி மகிமையால் தன் இஷ்டம்போல் பாபகர்மாக்களையும் செய்யத் துணிந்துவிட்டார்கள். பிரம்மாவினுடைய சிருஷ்டியில் ஒரு பிராணியாவது பாபகர்மாக்களை செய்யாமலிருக்கிறவர்களை காணுவது ரொம்பவும் துர்லபமாக ஆகிவிட்டது. அதிலும் மனிதர்கள் ரொம்பவும் பாபிகளாக ஆகிவிட்டார்கள். வேதங்களுக்கும் அதைக் கற்றுணர்ந்த மஹான்களுக்கும் பெருமையும் இல்லாமல் போய்விட்டது. வேத பாஹ்யாளான அநேக துர்மதஸ்தர்களும் ஜகத்தில் வியாபரித்து தனது மதத்தைப் பரவச்செய்யவும் ஆரம்பித்துவிட்டார்கள். அவ்விதமான கடோரமான பூலோக விருத்தாந்தத்தை மஹாகைலாசத்திற்கு அதிபதியான பரமேச்வான் ஸர்வக்ஞனதினால் அறிந்து தான் பூமண்டலத்தில் அவதரித்துத்தான் இந்த கஷ்டத்தை நிவர்த்திசெய்ய வேண்டுமே தவிர மற்றவர்களால் முடியாது என்று தீர்மானித்து கர்மபூமியான பூமண்டலத்தில் மனுஷ்யரூபமாக அவதாரம்செய்ய பரமேச்வரன் சங்கல்பம் செய்தார்.

---

(இன்னும் வரும்)

# விவாஹ தர்மம்.

இந்த பூமண்டலத்தில் அதிலும் பாரத நாட்டில், முக்கியமாய் பிராம்மணர்களுக்கு தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்ற 4-புருஷார்த்தங்களையும் அடைய விவாஹம் என்றதுதான் உபாயமாகும். சாஸ்திரத்தில் விதித்த காலத்தில் புருஷன் உபநயனம் செய்துகொண்டு குருகுலவாஸம் முதலான பிரம்மசர்யத்தோடு வேதம் முழுதையும் அர்த்த ஞானத்தோடு ஆசாரியனுடைய அனுக்ரஹவிசேஷத்தால் தனக்கு சித்தித்த பிற்பாடு ஆசாரியனுடைய உத்திரவைப் பெற்றுக்கொண்டு தனது குலத்திற்கு ஸமானமான குலத்திற் பிறந்த கன்னிகையை விதியை அனுஸரித்து தான் கிரஹித்துக் கொள்ளுகிறதே விவாஹம் என்ற தர்மமாகும், இந்த விவாஹமானது போகத்திற்காக இல்லை, தர்மத்தை அனுஷ்டானம் பண்ணுவதற்காகத்தான் என்று சாஸ்திரங்களில் கூறப்படுகின்றது. ஸ்திரீ பரிக்ரஹத்தால் புருஷன் கார்ஹஸ்த்யம் என்ற ஆசிரமத்தை அடைந்து பிறகுதான் தனது வர்ணத்திற்கும் ஆசிரமத்திற்கும் உசிதமான தர்மத்தை அனுஷ்டிப்பதற்கு அதிகாரியாக ஆகுவான்.

சுருதி என்ற வேதத்திற் சொல்லப்பட்ட சுரௌதமான தர்மமோ, ஸ்மிருதியிற் சொல்லப்பட்ட ஸ்மார்த்ததர்மமோ அந்த சகலமான தர்மங்களுக்கும் இந்த விவாஹமே மூலதர்மமாக சித்திக்கிறபடியால் இதுவும் தர்மந்தான். தர்மமோ அதர்மமோ பிரத்யக்ஷமாக புலப்படுகிற வஸ்துவல்ல. சாஸ்திரத்தைக் கொண்டுதான் இது தர்மம் இது அதர்மம் என்று அறிந்து கொள்ளவேண்டும். சாஸ்திரமானது எதை விதிக்கிறதோ அதை தர்மமாகவும் சாஸ்திரமானது எதை பிரதிஷேதம் பண்ணுகிறதோ அதை அதர்மமாகவும் தெரிந்துகொள்ள வேண்டும். சாஸ்திரம் இல்லாதுபோனால், தர்மத்தின் உண்மையையோ அதர்மத்தின் உண்மையையோ தெரிந்து கொள்ளமுடியாது இந்த விவாஹம் என்றது சகல தர்மத்திற்கும்

மூலபூதமான தர்மம் என்று முன் சொன்னதினால், இந்த விவாஹத்தை அனுஷ்டிப்பதில் சாஸ்திரமே நமக்கு சரணமாகிறது. சாஸ்திரத்தில் எந்தகாலத்தில் இந்த விவாஹத்தை அனுஷ்டிக்க வேண்டுமென்று போதிக்கிறதோ அந்த காலத்தில்தான் அந்த தர்மத்தை அனுஷ்டிப்பது அவசியமாகிறது தர்மங்கள் எல்லாம் காலத்தையே பிரதானமாக முன்னிட்டு ஏற்பட்டவை. லோகத்திலுங்கூட கர்ஷணம் (சாகுபடி) முதலான கர்மாக்களும் காலத்தைத்தான் பிரதானமாக எதிர்பார்க்கிறது என்றது பிரசித்தம்.

மழையுள்ள காலங்களில் சாகுபடி செய்தால்தான் அந்த கர்மா பலத்தைக் கொடுக்கின்றது. புருஷனுடைய சௌகர்யம் போல் தனக்குத் தோன்றின காலத்தில் செய்கிறது என்றது கிருஷி முதலான லௌகிக வியாபாரத்திலும் அஸாத்தியமாகத்தான் இருக்கிறது. அப்படியிருக்கும்பொழுது வைதிகமான கர்மாக்களுக்கு மூலமான இந்த விவாஹம் என்ற வைதிகமான கர்மத்திற்கு சாஸ்திரத்திற் கூறப்பட்ட காலந்தான் காலமாகும் என்றதில் என்ன ஆக்ஷேபணை இந்த விவாஹம் என்றது புருஷனுக்கு முக்கியமல்ல. ஸ்திரீகளுக்குத்தான் ஓர் பெரிய சம்ஸ்காரமாகும். புருஷனுக்கு உபநயனம் எவ்விதம் விஹிதமோ அதுபோல் ஸ்திரீகளுக்கு உபநயன ஸ்தானத்தில் இந்த விவாஹம் என்ற சம்ஸ்காரமானது விதிக்கப்பட்டிருக்கிறது. இதனால், உபநயனகாலமே விவாஹ காலமாகும் என்றது திண்ணம்.

உபநயனகாலமோ கர்ப்பம் தரித்த வருஷம் முதல் எட்டாவது வயதோ, பிறந்த வருஷம் முதல் எட்டாவது வயதோ முக்கிய காலமாக சொல்லப்பட்டிருக்கிறது. அதுபோல்தான் ஸ்திரீகளுக்கும் கர்ப்பம் தரித்த நாள்முதல், எட்டாவது வயதிலோ பிறந்தது முதல் எட்டாவது வயதிலோ இந்த விவாஹம் என்ற ஸம்ஸ்காரத்தை செய்யவேண்டும் என்று விவாஹத்திற்கு முக்கியகாலமானது ஏற்பட்டிருக்கிறது. உபநயனம் ஆன பிறகுதான் வேதத்யானம்

முதலிய கர்மாக்களில் அதிகாரியாக ஆவதுபோல் விவாஹம் என்ற ஸம்ஸ்காரம் சித்தித்த பிறகுதான் ஸ்திரீகளுக்கும் பிராம்மண ஸ்திரீ என்றது சித்தித்து சகல கர்மாக்களிலும், அதிகாரம் எற்படுகிறது. ஆகையால், எட்டாவது வயதுதான் முக்கியகாலமாகும். 9-ம் 10-ம் கௌணகாலந்தான். ஆகிலும் அந்த கௌண காலத்தில் முக்கியகாலம். பத்துக்குமேல், ருதுவாகிறதற்கு முன்காலம் வரையில் கௌணத்தில் கௌணமான காலமாக சொல்லவேண்டும்.

ருதுவானபிறகு சர்வ பிரகாரத்திலும் இந்த விவாஹம் என்ற ஸம்ஸ்காரமானது சாஸ்திரத்தில் ரொம்பவும் நிஷேதிக்கப் பட்டிருக்கிறது. ருதுவாகிறதற்கு முன் விவாஹம் எந்த பிராம்மண ஸ்திரீக்கு ஆகவில்லையோ அந்தஸ்திரீயினுடைய தாய்தகப்பன் தமையன் முதலானவர்களைக்கூட பெரிய அபராதியாக சாஸ்திரத்திற் கணக்கிட்டு அம்மூன்று பேர்களும் நரகத்தை அடைகிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ருதுவான பிறகு அந்த ஸ்திரீயை கிரஹிக்கிற பர்த்தாவையும் அவன் பேசத்தகாதவன் என்றும் பிராம்மண கூட்டத்தினின்றும் விலக்கத்தகுந்தவன் என்றும் அவனை சூத்திரன் என்றும் சாஸ்திரமானது ஸ்பஷ்டமாக நிந்தித்துவிட்டது அந்த ஸ்திரீயினுடைய ஜன்மா வீணாய் ஆகிவிடுமே என்றதை விஸ்தரிக்கவும் வேண்டுமா. ஒரு பிராம்மண ஸ்திரீ ருதுவாகிறதற்கு முன் விவாஹம் ஆகாமலிருந்தால் மேற்சொன்ன பிரகாரம் பலர்களுடைய ஜன்மா வீணாகி பலர்கள் நரகத்தை அனுபவிக்கும்படியான கஷ்டம் நேரிடுகிறது. ஆகையால், ருதுவாகிறதற்கு முன் காலந்தான் விவாஹம் என்ற ஸம்ஸ்காரத்திற்கு முக்கியமான காலமாகும்.

ருதுவான பிறகு விவாஹ ஸம்ஸ்காரத்தை போதிக்கக்கூடிய சில ஆபாஸமான சாஸ்திரம் காணப்படுகிறதினாலும் அவைகளை சூத்திரர்களுடைய விஷயமாக நயனம் செய்துகொள்ள வேண்டும். அந்த சாஸ்திரம் சூத்திர விஷயந்தான் என்றதில் சூத்திரனுடைய தர்மத்தைச் சொல்லும் பிரகரணத்தில் படிக்கப்பட்டிருப்பதேதான்

காரணமாகும் சூத்திர ஜாதிகளிலோ விவாஹமானது இருவருக்கும் போகத்திற்காகத்தான். தர்மானுஷ்டானத்திற்காக இல்லை. போகமானது இச்சானுசாரமானதால், எந்த காலத்தில் இச்சை ஏற்படுகிறதோ அந்த காலத்தில் அவர்கள் விவாஹம் செய்து கொள்ளலாம். அவர்களுடைய விஷயத்தில் அதற்கு நியமமே இல்லை. பிராமணர்களுக்கோ, தர்மானுஷ்டானத்திற்காக இந்த விவாஹம் ஏற்பட்டது என்றதை முன் சொன்னோம். தர்மமோ இச்சையை அனுசரித்ததல்ல. சாஸ்திரத்தை அனுசரித்தது சாஸ்திரம் எந்த காலத்தில் செய்ய உத்திரவு செய்கிறதோ அதுதான் சரியான காலமாகும்.

ஆகையால், பிராம்மண ஸ்திரீகளுக்கு ஏற்பட்ட விவாஹ ஸம்ஸ்காரமானது தர்மமானதினால், நமது இச்சையை அனுசரித்து காலத்தை நிர்ணயம்பண்ண நாம் அதிகாரிகளல்ல. தர்மத்திற்கு விரோதம் இல்லாத காலத்தில் போகத்திலும் சாஸ்திரம் அனுக்ஞை செய்ததேதவிர இந்த விவாஹம் போகத்திற்குத்தான் என்று சாஸ்திரத்தின் உண்மையில்லை. ஆனால் அந்த விவாஹப் பிரகாணத்தில் உள்ள சில மந்திர பாகங்களை கவனிக்கும்பொழுது இந்த ஸ்திரீயும் புமானும் ஒருவருக்கொருவர் காமதாபத்தால் பீடிக்கப்பட்ட சமயங்களில் பேசிக்கொள்ளுவதான அபினயம்போல் சில அபிப்பிராயங்கள் வெளிக்கு த்வனிக்கின்றன இந்த ஸ்திரீ அதி பால்யமாயிருந்தால், இவ்விதமான அபிப்பிராயமுள்ள மந்திரபாகங்களுக்கு அந்த காலத்தில் அவகாசம் ஏற்பட நியாயமில்லை. அவைகளைக் கவனிக்கும்பொழுது அந்தஸ்திரீ ப்ரௌடையான தன்மையில் வந்த பிற்பாடுதான் இந்த விவாஹம் என்ற ஸம்ஸ்காரத்திற்கு அதிகாரியாக ஆகிறாள் என்று சிலர்களுக்கு சங்கை யேற்பட்டு ருதுவான பிறகுதான் ஸ்திரீகளுக்கு விவாஹம் செய்யவேண்டுமென்று தீர்மானிக்கிறார்கள்.

இது சரியாக ஆகாது அதுபோல் இன்னும் சில மந்திர பாகங்களை கவனிக்கும்பொழுது லாஜஹோம காலத்தில் அக்கினி

யின் சந்நிதியில் அந்த ஸ்திரீயை ரக்ஷிக்கவேண்டுமென்று பர்த்தாவான புருஷன் அக்கினியை பிரார்த்திக்கும்பொழுது இந்த ஸ்திரீயை ரக்ஷிக்க வேண்டும் என்றதோடு அவளுடைய குழந்தைகளையும் காப்பாற்ற வேண்டுமென்று அந்த பர்த்தாவான புருஷன் அக்னியை பிரார்த்திக்கிறான். இவ்விதம் அர்த்தத்தை வெளியாக்குகிற மந்திரங்களை கவனிக்கும்பொழுது புத்திரவதியான ஸ்திரீகளுக்குத்தான் விவாஹ ஸம்ஸ்காரத்தில் அதிகாரம் ஏற்படுவதுபோல் தோன்றுகிறபடியால் புத்திரவதியாக ஸ்திரீயாகவிட்டுத்தான் விவாஹ ஸம்ஸ்காரத்தை அவர்களுக்குச் செய்யவேண்டும் என்று சித்தாந்தம் செய்யக்கூடுமா. அப்படித்தான் சித்தாந்தம் பண்ணினால் அதை யாரால்தான் ஒப்புக்கொள்ளக்கூடும். ஆகையால் இதுபோலொத்த பாகங்களில் விபரீதமான அர்த்தத்தை கிரஹித்துக்கொள்ளாமல் பிறகு பாவியாகவரும் விஷயத்தை அக்னியினிடத்தில் பிரார்த்தித்துக் கொள்ளுகிறான் என்று அர்த்தம் சொல்லுகிறதுபோல் ஸ்திரீயும் புமானும் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளுகிறதான மந்திர பாகங்களிலும் தோன்றுகிற அர்த்தங்களை பாவியான பிரார்த்தனையாக வைத்துக்கொள்ள வேண்டுமே தவிர வேறுவிதமான விபரீத அர்த்தத்தை செய்துகொண்டு விவாஹ காலத்திலேயே பிரௌடையாக ஆகியிருக்க வேண்டுமென்று சொல்லுவது மிகவும் சாஹஸமானது.

அதுபோலுள்ள அர்த்தங்களை விளக்குகிற மந்திரபாகங்களுக்கு பாவியாக வரும் விஷயத்தை தற்காலத்தில் சொல்லுவது போல் அபிநயம் பண்ணுவதில்தான் தாத்பர்யமே தவிர ருதுவாகவிட்டுத்தான் ஸ்திரீகளுக்கு விவாஹஸம்ஸ்காரத்தை செய்யவேண்டுமென்று சொல்வதில் தாத்பர்யமே இல்லை. ஆகையால் ருதுவாகிறதற்கு முன் சாஸ்திரத்தால் குறிப்பிட்ட காலத்தில் ஸ்திரீகளுக்கு விவாஹ ஸம்ஸ்காரத்தைச் செய்வது தர்மமாகும்.

எட்டாவது வயதில் விவாஹ ஸம்ஸ்காரத்தை செய்யவேண்

டுமென்றால். ஸ்திரீகளுக்கு ரொம்பவும் பால்யத்திலேயே விவாஹம் பண்ணும்படியான நிர்ப்பந்தம் ஏற்படுகிறதே அப்படியானால் சீக்கிரமாகவே புருஷ சம்சர்க்கத்திற்கு அவகாசம் ஏற்பட்டு சந்ததிகளும் சீக்கிரமாகவே உண்டாகுவார்களே அவ்விதம் பால்யமான ஸ்திரீகளுக்கு உண்டாகும் சந்ததிகளுக்கு ஆயுளோ பலமோ இவைகள் திடமாக ஏற்பட நியாயமில்லையே. அந்த சந்ததிகள் துர்பலத்தோடுங் கூடினவர்களாகத்தான் இருப்பார்கள். ஆயுளும் சீக்ரமாக முடிந்துவிடும் என்ற ஒரு காரணத்தை தனது புத்தியாற் கற்பித்துக்கொண்டு பால்ய விவாஹம் உசிதமல்லவென்று தீர்மானத்தோடு பருவகாலம் வந்த பிற்பாடுதான் ஸ்திரீகளுக்கு விவாக ஸம்ஸ்காரத்தைச் செய்யவேண்டுமென்று கற்பிக்கிறார்கள். அதுவும் சரியானதாக ஆகாது. பலமானது லௌகிகபலம், வைதிகபலம் என்று இருவகைப்படும். லோகத்தில் பிரசித்தமான சௌர்ய வீர்யாதிகளே லௌகிக பலமாகும். சாஸ்திரங்களைப்படித்து அதின் உண்மையை தெரிந்துகொண்டு பெரிய பாண்டித்யத்தை தர்மானுஷ்டானத்திற்கும் மோக்ஷமென்ற பரமபுருஷார்த்தத்தைத்தான் அடைவதற்கும் உபயோகமாக சம்பாதிப்பதே வைதிகமான பலமாகும். சௌர்ய வீர்யாதிகளான லௌகிக பலம் பிராம்மணர்களுக்கு அவசியமில்லை. பிராம்மணர்களுக்கு இதார்களோடு யுத்தம்பண்ணி ராஜ்யத்தை அடையவேண்டியது அவசியமா? எதற்காக சௌர்ய வீர்யாதிகள் பிராமணர்களுக்கு? ஆகையால் அவ்விதமான லௌகிக பலத்தில் பிராம்மணர்கள் குறைவை அடைவதினால் பிராம்மணர்களுக்கு ஏற்படும் புருஷார்த்தங்களுக்கு ஹானி வாராது. வைதிக பலம் பிராம்மணர்களுக்கு அவசியம் வேண்டும். அந்த வைதிக பலத்தை அடையவோ பால்ய ஸ்திரீகளிடத்தில் பிறந்தது ஒரு பிரதிபந்தமாக ஆகாது. வேத சாஸ்திரங்களை படிக்காமல் இருப்பதும் துஷ்ட சங்கமும் பூர்வஜன்மகர்மாவும்தான் காரணமாகும். தனது புத்திசக்தியினால் குருகுலவாசம்பண்ணி வேதசாஸ்திரங்களைப் படித்தால் திவ்யமான ஞானத்தைத்தான் அடைந்துவிடலாம். இந்த

பலந்தான் பிராம்மணர்களுக்கு வேண்டும். மற்ற லௌகிக பலம் வேண்டாம், அர்த்தபரர்களுக்கு லௌகிகபலம் பிராம்மணர்களோ தர்மபரர்கள். இவர்களுக்கு ஞானபலமே தேவை. லௌகிக பலத்தினால் குறைந்தவர்களாக ஆகிறார்கள். அதற்குக் காரணம் ரொம்பவும் பால்யத்திலேயே ஸ்திரீகளுக்கு விவாஹம் பண்ணும்படியான நிர்பந்தம் எற்பட்டு பால்யத்திலேயே அந்த ஸ்திரீகளிடத்தில் தான் பிறந்ததே தான் காரணமாகும். அதற்காக பால்ய விவாஹத்தை தடுக்கவேண்டுமென்று சொல்லுகிற புத்திமான்கள் காலக்கிரமத்தில் குதிரை, ஒட்டகம், யானை முதலான பிராணிகளுக்கு உள்ள பலம் மனிதர்களுக்கு இல்லையே, அதற்குக் காரணம் என்னவென்றால் மனிதர்களில் அதிலும் பிராம்மணர்களில் இன்ன புருஷன் இன்ன ஸ்திரீயை சாஸ்திரத்தோடு கிரஹித்து தர்மத்திற்கு விரோதமில்லாமல் அவளிடத்தில் புத்திரோத்பாதனம் செய்கிறது என்று எற்பட்டிருக்கும் ஒரு கொடுமையான நியமந்தான் காரணமாகும். ஆகையால் அந்த நியமத்தையும் தடுக்கவேண்டும். யானை குதிரைகளைப் போல் இன்ன புருஷ ஜந்துவுக்கு இன்ன ஸ்திரீ ஜந்துவுக்கும்தான் ஒரு தர்மபத்யம் என்ற நியமம் இல்லாமல் அததுக்கு இஷ்டப்படி எந்த புருஷயானை எந்த ஸ்திரீயானையை, அதுபோல் எந்த புருஷ குதிரை எந்த ஸ்திரீ குதிரையை தான் நினைத்தகாலத்தில் கிரஹித்துக் கிரீடிக்கிறதுபோல் மனிதர்களில் அதிலும் பிராம்மணர்களிலும் பசுக்களுக்குள்ள ஸ்வாதந்திரியத்தை எற்படுத்திவிட்டால் அப்பொழுது உண்டாகும் சந்ததிகள் யானையைப்போல், குதிரையைப் போலவும் பலிஷ்டர்கள் ஆவார்கள் என்று சொல்லுகிறது. இது ரொம்பவும் ஆபாசமான ஸல்லாபமே. ஆகையால் பசுபலம் மனுஷ்யனுக்கு தேவையில்லாததினால் பசுக்களின் ஆசாரத்தை மனுஷ்யனிடத்தில் ஸ்தாபனம் செய்யவேண்டியது அவசியம் இல்லாதது போல், சௌர்ய வீர்யாதிகளான லௌகிக பலம் பிராம்மணர்களுக்குத் தேவை இல்லாததினால் பிராம்மணர்களிடத்தில் லோகாசாரத்தை ஸ்தாபனம் பண்ணத் துணிவது ரொம்பவும் ஸாஹஸமான காரியம்.

பிராம்மணர்களுக்கு வைதிக பலமே பலம். அந்த பலத்தை பிராம்மணர்கள் அடைவதற்கோ அவரவர்களுடைய பூர்வ கர்மா முதலானவைகளே காரணமாகும். அவர்களுடைய தாய்கள் ரொம்பவும் பால்யத்திலேயே பர்த்தாவோடு சம்பர்க்கம்பண்ணி இவர்களைப் பெற்றது காரணமாகாது. இவ்விதமான யுக்திகளைக்கொண்டு பால்ய விவாஹத்தைத் தடுப்பது சரியாக ஆகாது. லௌகிக பலமும் பிராமணர்களுக்குத் தேவையென்றே வைத்துக்கொள்வோம் அப்பொழுதும் அந்த பலத்தை இல்லாமல் செய்வதில் பால்ய விவாஹம் காரணமாக ஆகாது முன்காலத்தில் ரிஷிகளுடைய கன்னிகைகளுக்கு ஐந்தாவது வயது முடிவதற்கு முன்பே விவாஹ ஸம்ஸ்காரம் ஏற்பட்டு 12 அல்லது 13-வது வயதில் புத்திரோத்பத்தியும் ஏற்பட்டு அந்த புத்திரனும் பெரிய ரிஷிகுலங்களுக்கு குலபதியாகும் தன்மையை அடைந்து ஒரு நாளைக்கு அளவற்ற தூரங்கள் கால் நடையாகவே நடந்து போய்க்கொண்டு சரீர லாவண்யமும் தார்ட்யமும் மற்றொருவர்களுக்கு அதுபோல் இல்லையென்று சொல்லும்படி விளங்கிவந்தார்கள். புராதனமான மஹாரிஷிகளுடைய பலம் இக்காலத்தில் உள்ள மனிதர்களுக்குள் ஒருவரிடத்திலாவது காணமுடியுமா. ஆஞ்ஜனேயர் என்ற ஒரு பரம புருஷனை லௌகிக பலத்திலும் ரொம்பவும் பிரதானமாக ராமாயணம் முதலான நூல்களால் சர்வ பிராணிகளும் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். அந்த ஹனுமானுடைய தாயாரான அஞ்சனை என்ற ஸ்திரீக்கு பன்னிரண்டாவது வயது நடக்கும்பொழுது ஹனுமான் என்ற பரம புருஷன் பிறந்ததாக ஆனந்த ராமாயணம் என்ற நூலிற் காணப்படுகின்றது அந்த ஹனுமாருடையபலம் மற்ற யாருக்காவது உண்டா. அவருடைய தாயாருக்கும் பால்ய விவாஹந்தான் நடந்தேறியிருக்கிறது. அதுபோல் விச்ரவஸ் என்ற மஹாரிஷியினுடைய தர்ம பத்தினிக்கு 13 வயது நடக்கும்பொழுது ராவணன் பிறந்ததாக அந்த ஆனந்த ராமாயணத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. ராவணன்தான் துர்பலனா? அல்லது ராவணனுடைய தம்பி கும்பகர்ணன் விபீஷணன் முதலானவர்கள்தான் துர்பலர்களா? இன்

னும் இதைப்போல் எவ்வளவோ ரிஷிகளுக்குள்ளேயோ ராக்ஷஸர்களுக்குள்ளேயோ அசுரர்களுக்குள்ளேயோ கணக்கிடமுடியாமல் அந்தந்த ஸ்திரீகளுக்கு பால்யத்திலேயே விவாஹம் ஆகி, அதி பால்யத்திலேயே அவர்களுக்கு பிரபலமான புத்திரர்களும் பிறந்து லோக பிரசித்தர்களாக அந்த புத்திரர்கள் இருந்து அவர்களுள் சிலர் இன்னும் சிரஞ்சீவிகளாக இருக்கிறார்கள். அஜமஹாராஜாவினுடைய புத்திரரான தசரதருக்கு 60-வது வயது முடியுங்காலத்தில், தசரதருடைய தாயாராயும் அஜமஹாராஜாவினுடையபட்ட மஹிஷியாயும் உள்ள தேவஹூதி என்ற காரணப் பெயருடன் கூடின ஸ்திரீக்கு 73-வது வயது என்று கணக்குப்பண்ணி க்ஷத்திரியனுடைய நீதியை அனுசரித்து 60 வது வயது முடியும் பொழுது செய்ய வேண்டிய ஒரு சாந்தி கர்மாவைப்போல் 73-வது வயதிலும் ஒரு சாந்தி கர்மாவைச்செய்ய வேண்டுமென்று 'ஆன்வீக்ஷிகி' என்ற சாஸ்திரத்தில் சொல்லியபடி ஒரேகாலத்தில் 60-வது வயதில் செய்ய வேண்டிய சஷ்டி அப்த பூர்த்தி என்ற கர்மா தசரதருக்கும் 73-வது வயதில் செய்ய வேண்டிய ஜன்மசாந்தி என்ற கர்மா அவருடைய தாயாருக்கும் நடந்ததாக பிரம்மாண்ட புராணம் ஆத்ம புராணம் முதலான இடங்களிற் சொல்லப்படுகின்றன. இதை கவனிக்கும் பொழுது தசரதன் அவருடைய தாயாருக்கு எத்தனைவது வயதிற் பிறந்திருக்கிறார் என்பதை கவனிக்கவும். அந்த தசரதர் அறுபதினாயிரம் வருஷம் ஜீவித்தார் என்று ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த யுத்தத்தினுங்கூட அசுரர்களை ஜயிக்க தேவர்களுக்குக்கூட சக்தியில்லாமல் தசரதர் போய் அநேகம் தடவைகளில் தேவர்களுக்கு சஹாயம் செய்திருக்கிறார் என்றும் முராரி முதலான நாடகங்கள் மூலமாய்த் தெரியவருகிறது ஆகையால், மனுஷ்யர்களில், அதிலும் பிராம்மணர்களில் பலக்குறைவுக்கு அவாவர்களின் தாயாருக்கு பால்யத்திலேயே விவாஹம் செய்தது காரணமாகாது.

பலக்குறைவுக்கு தற்காலத்தில் காணப்படும் ஆசாரக்குறைவும் துர்ஜன சங்கமும் துஷ்டமான ஆகாரமும் அதிபோகமுந்தான் காரணமாகும்.

———

ஸ்ரீ ராமசந்திராய பரப்ரம்மணே நம:

## ஸ்ரீ ராமாயணத்தின் தத்வார்த்தம்.

---

லோகத்தில் சகல பிராணிகளுக்கும் சுகத்தை அடைய வேண்டும் துக்கத்தை நிவிருத்தி செய்துகொள்ள வேண்டுமென்று தான் அபிலாஷை இருந்து வருகிறது. ஆனால் அதன் உபாயத்தைத் தெரிந்துகொள்ள ஸ்வயமாக சக்தி இல்லாதவர்களாகத்தான் இருந்து வருகிறார்கள். இவ்விதமான அபிலாஷையை அநுசரித்து ஸுகம் என்ற இஷ்டத்தின் பிராப்திக்கும் துக்கம் என்ற அநிஷ்டத்தின் நிவிருத்திக்கும் உபாயத்தை போதிப்பதற்காக ஏற்பட்ட நூல்தான் சாஸ்திரம் என்று சொல்லப்படும். அந்த சாஸ்திரமும் பிரபுஸம்ஹிதை, ஸுகிருத்ஸம்ஹிதை, காந்தாஸம்ஹிதை, சிசுஸம்ஹிதை, என நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. ஒரு யஜமானன் தன் வேலைக்காரனைப்பார்த்து அதைச்செய் இதைச் செய்யாதே என்று ஏவுகிறதுபோல், சுபகர்மாவைச்செய் அசுபகர்மாவைச்செய்யாதே என்று பிராணிகளுக்கு நன்மையை போதிக்கும் நூல்தான் பிரபுஸம்ஹிதை என்று சொல்லப்படும். அதைத் தான் வேதம் என்றும் ச்ருதி என்றும் பண்டிதர்கள் சொல்லுவார்கள். இரண்டாவது ஸம்ஹிதை ஸுகிருத்ஸம்ஹிதை என்று சொல்லப்பட்டது சிநேகிதர்கள் ஒருவருக்கொருவர் சிநேக பாவத்தை அநுஸரித்து என் சிநேகம் வேண்டுமானால் நான் சொல்வதைக் கேள்கவேண்டும் என்று சொல்வதுபோல், பிராணிகளை சிநேகிதர்களாக வைத்துக்கொண்டு நன்மையை போதிப்பதான நூலே ஸுகிருத்ஸம்ஹிதை என்று சொல்லப்படும். அதை ஸ்மிருதி என்று சொல்லுவார்கள். மூன்றாவது ஸம்ஹிதை காந்தாஸம்ஹிதை பிரியமான ஸ்திரீ புருஷனைப்பார்த்து சொல்லுவதுபோல் நன்மையை போதிக்கும் நூலே காந்தாஸம்ஹிதை, என்று சொல்லப்படும்.

பாரதமும் ராமாயணமும்தான் காந்தாஸம்ஹிதை. நான்காவது சிசுஸம்ஹிதை குழந்தைகள் பேசுவதுபோல் கேள்க்கும் ஜனங்கள் மகிழும்படி நன்மையை போதிக்கவந்த நூலேதான் சிசுஸம்ஹிதை. பதினெட்டு மஹாபுராணங்களும் பதினெட்டு உபபுராணங்களும் சிசுஸம்ஹிதையாகும். இவ்விதம் பிரமாணமான சாஸ்திரங்கள் நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

பிரகிருதமான இராமாயணம் இதிஹாஸத்தில் சேர்ந்த காரணத்தால் காந்தாஸம் ஹிதையாகும். இந்த நூலில் ஸ்ரீசிதைமூலமாக அநேக தர்மரகஸ்யங்கள் வெளியாக்கப்பட்டிருக்கின்றன. ராமர் கூட சீதையின் முகமாகத்தான் அஹிம்ஸை என்ற தர்மத்தை தெரிந்துகொண்டார். இந்த ராமாயணத்தை ஆதிகாவ்யம் என்று சொல்லுவார்கள். உத்தமம், மத்தியமம், அதமம் என்று காவ்யமும் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. சப்தத்தின் அர்த்தம், வாச்யார்த்தம் என்றும், லக்ஷியார்த்தம் என்றும் வியங்கியார்த்தம் என்றும் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. சப்தத்திற்கு எந்த அர்த்தத்தைச் சொல்வதில் சக்தியோ அந்த அர்த்தம்தான் வாச்யார்த்தமாகும். சப்தத்திற்கு எந்த அர்த்தத்தில் தாத்பர்யமோ அது லக்ஷியார்த்தமாகும். சப்தத்தை உச்சாரணம் பண்ணுகிற புருஷனுடைய த்வனியால் எந்த அர்த்தம் த்வனிக்குமோ அந்த அர்த்தம்தான் வியங்கியார்த்தமாகும். இவ்விதம் வாச்யார்த்தம் லக்ஷியார்த்தம் வியங்கியார்த்தம் என்ற மூன்றுவிதமான அர்த்தங்களுக்குள் லக்ஷியார்த்தமானது காவ்யங்களில் அதிகமாக காணப்படாது. அதற்கு வேதங்களில்தான் பெரும்பாலும் பிரயோகம் ஏற்பட்டிருக்கின்றது காவ்யங்களிலும் ஆங்காங்கு கொஞ்சம் கொஞ்சம் லக்ஷியார்த்தமும் உபயோகிக்கப்படும்.

மற்ற இரண்டு அர்த்தங்களும்தான் காவ்யங்களில் பிரதானமாக உபயோகிக்கப்படும். அந்த இரண்டிற்குள் வியங்கியார்த்தம் அப்பிரதானமாகவும் வாச்யார்த்தம் பிரதானமாகவும் எந்த காவ்யத்

தில் உபயோகப்படுகின்றதோ அந்த காவ்யம் அதமகாவ்யம் என்று சொல்லப்படும். வியங்கியார்த்தமும் வாச்யார்த்தமும் எந்த காவ்யத்தில் சமானமாகக் காணப்படுகின்றதோ அந்த காவ்யம் மத்யமகாவ்யம் என்று சொல்லப்படும். வாச்யார்த்தம் அப்பிரதானமாகவும் வியங்கியார்த்தம் பிரதானமாகவும் எந்த காவ்யத்தில் காணப்படுகின்றதோ அந்த காவ்யம் உத்தம காவ்யமாகும். பிரகிருதமான இராமாயணமானது ஆதி காவ்யமென்று பிரயோகிக்கப்படுகிறபடியால் உத்தம காவ்யம் என்றுதான் சொல்லப்படவேண்டும்.

ஆகையால் இராமாயணத்தில் வ்யஙாகியார்த்தம்தான் பிரதானமாக இருக்கவேண்டும். அப்படியானுல்தான் இராமாயணம் உத்தம காவ்யமாகும். அந்தப்படியே இராமாயணத்தை முழுமையும் கதையாக இந்த புஸ்தகத்தில் எழுதப்படும். அதில் முதல் ஸர்க்கத்தில் வால்மீகி என்ற மகரிஷியானவர் நாரதரைப்பார்த்து கேள்கின்ருர். இராமாயணம் முழுமையும் பரமாத்மாவைச் சொல்லுகிறபடியால் அந்தப்பரமாத்மா என்ற ப்ரம்மத்தை குருவின் அநுக்ரகம் இல்லாமல் அறிவது முடியாத காரியமென்று வேதத்தில் கூறப்பட்டிருக்கிறபடியால் அதை அநுஸரித்து அந்த தர்மத்தை லோகத்திலும் ஸ்தாபனம் செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன் மகரிஷி வால்மீகியும் மகாமுனியான நாரதரை பரமாத்மாவின் தத்வத்தை ப்ரச்னம் பண்ணுகிருர். இராமாயணம் என்ற பதத்திற்கு அர்த்தமும் பரமாத்மாவை அடைவதற்கு உள்ள உபாயங்களை விளக்கும் நூல் என்று வெளியாகிறது.

ராமனென்ருல் யோகிகளுடைய மனதை ஆனந்திக்கச்செய்யும் பரம்பொருள் பிரம்மமென்றே அதன் அர்த்தம். அந்த பிரம்மத்தை அடைவதற்கு உள்ள உபாயங்கள் எந்த நூலில் சுலபமாக போதிக்கப்படுகின்றனவோ அந்த நூலுக்குத்தான் இராமாயணம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. இதனுலேயே இராமாயணத்தில் பிரம்ம தத்வம் பிரகாசிக்கின்றது என்பது வெளியாகிறது.

அந்தப்படியே ஆறு காண்டத்தின் அர்த்தத்தையும் எளிய தமிழ் நடையில் கதையாக எழுதி வெளியிட இந்த சஞ்சிகை ஏற்பட்டது.

அதில் முதல் காண்டத்துக்கு பாலகாண்டமென்று பெயர். பாலகாண்டம் என்ற இடத்தில் பால பதத்தால் ராகத்தையும் துவேஷத்தையும் விட்ட வித்வான்கள் என்று அர்த்தமாகும். குழந்தைகளுக்கு இஷ்ட வஸ்து அனிஷ்ட வஸ்து என்ற வேற்றுமையேயில்லை. அந்த வேற்றுமை இல்லாத காரணத்தால் ராகமோ துவேஷமோ இல்லாததுபோல் பிரும்ம வித்துக்களான வித்வான்களுக்கு தன்னுடைய ஆத்ம ஸ்வரூபத்தை காட்டிலும் சகல ஜெகத்தும் வேறுபடாத காரணத்தால் ராகமும் துவேஷமும் கிடையாது. ஆகையால் ராகத்துவேஷம் இல்லாத வித்வான்களை பாலர்களென்று வேதாந்த சாஸ்திரத்தில் சொல்லப்படும். காண்டம் என்றால் கிளை என்று அர்த்தம். வேதமானது அநாதிகாலமாகவுள்ள ஒரு பெரிய விருக்ஷமானதினால் விருக்ஷங்களுக்கு அநேக சாகைகள் இருக்கிறது போல் வேதங்களும் அநேக சாகைகளோடு கூடினது.

அதனால்தான் வேதத்தில் சாமசாகை, ரிக் சாகை என அநேக வகுப்பாக சாகாவியவகாரம் ஏற்பட்டிருக்கின்றன. அந்த வேதத்தின் பொருளோ பரப்பிரும்மமே அந்த வேதத்தின் பொருளான பிரும்மம் இந்த பூமண்டலத்தில் அதர்மத்தை நிக்ரஹம் செய்து தர்மத்தை ரக்ஷிப்பதற்காக தசரத சக்கிரவர்த்தியினுடைய குமாரன் என்ற வியாஜத்தால் மாயா மயமான சரீரத்தை ஸ்வீகரித்துக்கொண்டு திவ்யரூபத்தோடு அவதரித்தவுடன் அந்த பரம்பொருளை சொல்லும் வேதமும் ராமாயண ச்லோக ரூபங்களாக வால்மீகி மஹரிஷியினுடைய திருவாக்கினின்றும் உதித்தன. ஆகையால் ராமாயணமும் வேதமே. வேதத்தில் சாகை என்ற வியவகாரமிருப்பது போல் ராமாயணத்திலும் சாகை என்ற வியவகாரம் ஏற்படவேண்டிய அவசியமானதினால்தான் காண்டம் என்ற வியவகாரம் ராமாயணத்தில் ஏற்பட்டது.

அந்த காண்டமும் வேதத்தில் கர்ம காண்டம், உபாசனு காண்டம் ஞானகாண்டம் என்று மூன்று வகையாக வகுக்கப்பட்டிருக்கின்றன. கர்ம காண்டமும் நித்தியகாண்டம் நைமித்திக காண்டம் என்று இருவகைப்படும் உபாசனு காண்டமும் சாதன காண்டம் சாத்திய காண்டம் என்று இருவகைப்படும் ஞான காண்டமும் பரோக்ஷகாண்டம் அபரோக்ஷ காண்டம் என இரு வகைப்படும். இவ்விதம் வேதத்தில் ஆறுவிதம் காண்ட விபாகம் ஏற்பட்டதினுல் வேதமே ராமாயணம் என்று சொன்னதின்பேரில் ராமாயணத்தில் ஆறுவிதமான காண்ட விபாகம் ஏற்பட்டிருக்கின்றன. அதிலும் ஞானகாண்டமே ராமாயணத்தில் பெரும்பாலும் உபயோகப்படுத்தப்படும். பால காண்டம் ஞான காண்டமாகும். ஞானகாண்டத்தில் பரம்பொருளான பிரும்மம் சொல்லப்படுகிற காரணத்தால் ஞானிகள் ரமிக்கும் பிரும்மமானது ஞானகாண்டத்தில் விளங்கும் காரணத்தைக்கொண்டு ஞானகாண்டத்துக்கு ஞானிகளுடைய காண்டமென்றும் பெயர் உண்டு. ஞானிகளைத்தான் முன்பு பாலர்களென்று சொன்னேம், ராகத்துவேஷம் இல்லாமல் சமபுத்தியோடு இருப்பது பாலர்களுடைய சுபாவமானதினுல் ஞானிகளும் அந்த சுபாவத்தை கைக்கொண்ட காரணத்தால் ஞானிகளென்றும் கௌணமாக பாலர்கள் என்று சொல்லலாம்.

ராமாயணமாகிய புண்ணிய விருக்ஷத்தின் எந்த கிளையில் ஞானிகள் ருசியோடு அனுபவிக்கும் பிரும்மமாகிய மதுரமான பலம் விளங்குகின்றதோ அந்த காண்டத்திற்கு பாலகாண்டமென்று பெயர் ஏற்பட்டது. இந்த காண்டத்தில் சகல வேதங்களின் பொருளான பரபிரும்மமே சொல்லப்படுகிற காரணத்தாலும் அதை குருவின் உபதேசம் அன்றி அறிவது அரிதாக ஏற்பட்டிருப்பதினுலும் குருசிஷ்ய சம்வாத ரூபமாகிய கதையாய் அந்த தத்வத்தை பிரகாசப்படுத்த பாலகாண்டத்தில் அதிலும் ஸம்க்ஷேப ராமாயணம் என்று பிரசித்தி பெற்ற முதல் ஸர்க்கத்தில் நாரதர் என்ற தேவ ரிஷியை வால்மீகி மஹரிஷியானவர் எந்த பொருளை ஆசிரயித்தால்

பிராணிகளுக்கு சகல புருஷார்த்த லாபமும் ஏற்படுமோ அந்த பொருளை பிரச்னம் செய்தார்.

முதல் சுலோகத்தில் பொதுவாய் பிரச்னம் செய்துவிட்டு இரண்டாவது சுலோகம் முதல் குறிப்பிட்டு பிரச்னம் செய்தார். அந்த பிரம்மம் என்ற பரம்பொருளோ நிர்விசேஷம் என்று வேதாந்தங்களில் கூறப்பட்டிருக்கிற படியால் நிர்விசேஷமான பொருளை பிராணிகள் தனது மனதுக்கு விஷயமாகச் செய்துகொள்வது அசாத்தியமான காரணத்தால் உபாஸ்யமாகும் தன்மை அந்த நிர்விசேஷத்திற்கு வாராது என்று சித்தாந்தப்படுத்திக்கொண்ட வால்மீகி அந்த பிரம்மத்தை மாயாசபளிதமாகச் செய்து ஸகுணமாகச் செய்து கொண்டால்தான் உபாஸ்யத்வம் ஸம்பவிக்கும் என்ற எண்ணத்துடன் அந்த ஸகுணபரமாகவே பிரம்மத்தை பிரச்னம் பண்ணுவதற்கு ஆரம்பித்தார். இந்த சமஸ்தமான பிரபஞ்சத்திலும் சௌர்ய வீர்யாதி லௌகிக குணங்களோடும் அபஹதபாப்மத்வம் முதலான வைதிக குணங்களோடும் கூடினவனை பரமபுருஷன் யார் என்று வால்மீகி மஹரிஷியினுடைய பிரச்னத்தின் கருத்து.

நாரத மஹரிஷியாகிய பரமகுருவும் வால்மீகி மஹரிஷியினுடைய பிரச்னத்தை மனதில் வாங்கிக்கொண்டு பரமானந்த பரிதராகி சிஷ்யனை வால்மீகி மஹரிஷியைப் பார்த்து நாரத மஹரிஷியானவர் உத்தரம் சொல்லுகிறார். நாரத மஹரிஷிக்கு இந்த விஷயத்தில் உத்தரம் சொல்லுவதில் அளவற்ற சந்தோஷம் ஏற்பட்டது. அதற்கு காரணமோ எந்த பரமபுருஷனை வால்மீகி பிரச்னம் செய்கிறாரோ அந்த பரமபுருஷன் தத்காலத்தில் துஷ்டர்களை நிக்ரஹம் செய்து சிஷ்டர்களை பரிபாலனம் செய்வதற்காக சூர்யகுலமான இக்ஷ்வாகு வம்சத்தில் அப்பிராகிருதமான திவ்ய மங்கள விக்ரஹத்தோடு அவதரித்து பிரத்யக்ஷமாக சகல பிராணிகளுக்கும் புலப்படுகிற சௌலப்யமேதான் காரணமாகும். லோகத்தில் சௌலப்யம் பரத்வம் என்ற இரண்டும் எந்த இடத்தில் இருக்கிறதோ அதுதான்

மேலான பொருளாகும். இரண்டுமில்லாமல் ஒன்றுமட்டும் இருந்தால் அந்த பொருள் பெரிதல்ல

மஹா மேருபர்வதமானது தங்கமயமான மலை என்ற காரணத்தால், பரத்வம் அந்த மலையிலிருக்கிறது ஆகிலும் பிராணிகளுக்கு அது சுலபமாக இல்லாததினால் அது பெரிதாக ஏற்படவில்லை. அப்படியே, தெருவீதியில், இருக்கும் மண்கட்டிகளில் சௌலப்யம் இருக்கிறது. ஆகிலும் அது பரமாகிறதில்லை. அதனால் அது பெரிதல்ல. சௌலப்யம் பரத்வம் இரண்டுடனும் கூடிய வஸ்துத்தான் மேலான வஸ்து என்று சொன்னோம். பிரகிருதத்தில் இக்ஷ்வாகு வம்சத்தில் அவதரித்த பரமபுருஷன் சகல வேதாந்தங்களில் பரமான பொருள் என்ற காரணத்தால் பரம் என்றதில் யாதொரு சந்தேஹமும் இல்லை. ஆகிலும் சகல பிராணிகளுக்கும் பார்க்கும்படியான ஸௌலப்யத்தை அடைந்த காரணத்தால் சுலபனும் இந்த பரம புருஷன் இருந்து வருகிறான். இதனால், இந்த ஸ்ரீமத் ராமாயணத்தின் கதாநாயகனை ராமன் என்ற பரம புருஷனிடத்தில் ஸௌலப்யம் பரத்வம் என்ற இரண்டும் மேல் சொன்ன பிரகாரம் விசதமாகத் தெரிகிறபடியால், நிரம்பவும் பெரிதான பொருள் இந்த மஹானுபாவனேதான்.

இப்பேர்ப்பட்ட பரம புருஷனுடைய பரதத்வத்தை சொல்லும்படியான பாக்யம் வால்மீகி மஹரிஷி மூலமாக நமக்கு ஏற்பட்டதே என்ற விஷயத்தை நினைத்து நாரதர் மிகவும் ஆனந்த சாகரத்தில் மூழ்கி மிகவும் பரவசமாக ஆனார். பிறகு வால்மீகியைப்பார்த்து இந்த பூமண்டலத்தில் சூர்ய வம்சமானது இக்ஷ்வாகு முதலான மஹாதார்மீகாளான ராஜாக்களால், அலங்கரிக்கப்பட்ட காரணத்தால், மஹா பிரசித்தி பெற்றது என்றதை நீரும் அறிந்ததே. அவ்விதமான மஹா வைபவம் உள்ள வம்சத்தில் சர்வக்ஞனை பரமாத்மா மனுஷ்ய விக்ரஹத்தோடு அவதரித்து சகலவிதமான கல்யாண குணங்களால் அலங்கரிக்கப்பட்டவனாக விளங்கி வருகிறான். இந்த

பூமண்டலத்தில் எந்த எந்த காலத்தில் வர்ணுசிரம தர்மத்திற்கு குறைவு ஏற்படுகிறதோ அந்தந்த காலத்தில் பகவதவதாரம் ஏற்படுகிற தென்று சாஸ்திரத்தில் கூறப்படுகின்றது சர்வஜகத்தினுடைய ஸ்திதிக்கு தர்மமேதான் காரணமாகும். தர்மம் அழிந்தால் ஜகத் அழிந்துவிடும். ஆசுரசம்பத்தில் பிறந்த மூர்க்க ஜனங்கள்தான் தர்மத்தின் அழிவிற்குக் காரணமாவார்கள். அந்த மூர்க்க ஜனங்களை சாஸித்தால், தர்மத்திற்கு அபிவிருத்தி ஏற்பட்டுவிடும். இது பகவாஞலேதான் சாத்யமாகும். அதற்காக பகவான் அவதரிக்கிருர் என்றது சாஸ்திரத்தின் கருத்து

முன்பு ராமாயணம் என்ற சப்தத்திற்கு ராமர் என்ருல் பரப்ரும்மமே அதை அடைவதற்கு உள்ள உபாயங்கள் எந்த இடத்தில் கூறப்படுகின்றனவோ அந்த நூல்தான் ராமாயணம் என்ற சப்தத்தால் சொல்லப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதை அனுசரித்து ராமன் பிரம்மமானதிஞல் அந்த பிரம்மமானது எந்த வேதத்தின் அர்த்தமோ அந்த வேதந்தான் பிரகிருதத்தில் தசரத மஹாராஜாவென்று சொல்லப்படுகிறது. "தச" என்ற பதத்தால் பத்தாவது என்ற அர்த்தம் ஏற்படுகிறது. "ரதம்" என்ருல் மனோரதம் என்றது அர்த்தம். பத்தாவது வஸ்துவில் எந்த சாஸ்திரத்திற்கு மனோரதமோ அதாவது அபிப்பிராயமோ, பரமதாத்பர்யமோ அந்த சாஸ்திரந்தான் தசரதன் என்ற சப்தத்தால் சொல்லப்படும். லோகத்தில் அன்னம் வித்தம், புத்திரன் களத்திரம், சரீரம், இந்திரியம், மனது, புத்தி, ஜீவன், ஈசுவரன் என்று பத்துவிதமான பொருள்கள் பிரசித்தி பெற்றவை. அதில் சரீரம் முதல் ஜீவன் வரையிலுள்ள 5-வஸ்துக்கள் ஆந்தரமான கோசங்கள் என்றும் அன்னம் முதல் களத்திரம் வரையிலும் உள்ள 4-வஸ்துக்கள் பாஹ்மான கோசங்கள் என்றுஞ் சாஸ்திரங்களில் கூறப்படுகின்றன.

அதில் அன்னம் என்ருல், சர்வ பிராணிகளாலும், புஜிக்கப்படுகிற பொருளாகும். சர்வ பிராணிகளுக்கும் அது பிரியமான வஸ்துத்தான். ஆகிலும் அந்த, அன்னத்தைக்காட்டிலும் வித்தம்

என்ற தனமானது அதிமாகப் பிரியமாகின்றது. தனத்திலுள்ள பிரேமை அன்னத்தில் இல்லை என்றது அனுபவ சித்தம். சாப்பாடு சௌக்கியத்தைக்கூட குறைத்துக்கொண்டு தனத்தை விருத்தி செய்கிறவர்கள் அநேகம் பேர்களைப் பார்க்கிறோம். அதைப்போல் பணத்தைக்காட்டிலும், புத்திரன், அதிகமான பிரியம். புத்திரனுக்காக அளவற்ற பணத்தை அழிக்கிறவர்களையும் காண்கிறோம். அப்படியே புத்திரனைக்காட்டிலும் களத்திரம் என்ற ஸ்திரீயானவள் மிகவும் பிரியமாகிறாள். தன் மனைவிக்கு விரோதமான கார்யத்தைச் செய்யும் புத்திராதிகளையும் தியாகம் பண்ணிவிடுகிறார்கள் என்றதும் அனுபவசித்தம். களத்திரத்தைக்காட்டிலும் தனது தேஹம் மிகவும் பிரியம். களத்திராதிகளுக்கு ஆபத்து நேரிடும் காலத்திலும் தன் தேஹத்திற்கு விபத்து நேரிடாமலிருந்தால் போதுமென்று ஆசையுள்ளவர்களையும் காணலாம். தேஹத்தைக்காட்டிலும் இந்திரியம் ரொம்பவும் மேலானது. ஸ்தூலமான தேஹத்திற்கு விபத்து நேர்ந்தாலும் கண் காது முதலான இந்திரியங்களுக்கு விபத்து வரக்கூடாது என்றுதான் மனிதர்கள் நினைக்கிறார்கள். இதனால் தேஹத்தைக்காட்டிலும் இந்திரியம் மேலானது என்று விளங்குகிறது. இந்திரியங்கள் தான் ஸ்வயமாகவே ஒரு விஷயத்தில் போகிறதில்லை. மனம் போகிற இடத்திற்குத்தான் இந்திரியங்கள் போகின்றன என்றதும் பிரசித்தம். எந்த விஷயம் மனதிற்கு ருசிக்கிறதோ, அதுதான் இந்திரியங்களுக்கும் ருசிக்கிறது.

இதனால் இந்திரியங்கள் மனதிற்கு பாதந்திரம் என்றது வெளியாகிறது. அக்காரணத்தால் இந்திரியங்களைக் காட்டிலும் மனது மேலானது. மனதானது சுகத்திற்கு சாதனமான விஷயத்தில்தான் போகும். துக்க சாதனத்தில் போகாது. ஆனால், இது துக்க சாதனம் இது சுகசாதனம் என்று வகுத்து அறிய மனதிற்கு சக்தியில்லை. அந்த சக்தி புத்திக்கே. நல்லது கெட்டது என்றதை புத்தியானது தீர்மானம் பண்ணின பிற்பாடு நல்லதில் மனது பிர விருத்திக்கும். கெட்டதிலிருந்து நிவிருத்திக்கும். இதுதான் ஸ்வபா

வம். மனதின் சஞ்சாரமும் புத்தியினுடைய அதீனமாக ஏற்படு கிறபடியால் மனதைக்காட்டிலும் புத்தி மேலானது. அந்த புத்தி யைக்காட்டிலும் கர்த்தாவாயும் போக்தாவாயும் உள்ள ஜீவனே மேலானவன். லோகத்தில், போக்யமான வஸ்து, போகாயதன மான வஸ்து, போக உபகாணங்கள், இவைகளைக்காட்டிலும் போக் தா மேலானவன் என்பது பிரசித்தம். பிரகிருதத்திலும் அன்னம் முதல் களத்திரம் வரையில் போக்கிய வஸ்து. தேஹம் போக ஆயதனம் இந்திரியம் மனது புத்தி இவைகள் போக உபகாணங் கள். ஜீவனே போக்தா ஆகையால் இவைகளைக்காட்டிலும் அந்த ஜீவன் மேலானவன் என்பதில் ஆக்ஷேபணையே இராது.

இந்த ஜீவனைத்தான் வேதாந்த சாஸ்திரங்களில் சிதாபாஸன் என்றும் ஆனந்த மயகோசம் என்றும் சம்ஸாரி என்றும் சொல்லப் பட்டிருக்கிறது.

அவித்தை என்றது கண்ணாடியைப்போல், நிர்மலமான ஓர் பதார்த்த விசேஷமென்று வேதாந்திகளின் சித்தாந்தம். அந்த அவித்தையில் ஏற்படுகிற பிரம்மத்தினுடைய பிரதி பிம்பத்தைத் தான் ஜீவன் என்று சொல்லுவார்கள். பிம்ப பூதமான பிரம்மந் தான் ஆத்மாவாகும். நான் என்ற புத்தியால் சகல பிராணிகளும் பொதுவாய், பிம்பபூதமான ஆத்மாவைத்தான் விஷயீகரித்துக் கொள்ளுகிறார்கள். சர்வ பிராணிகளுக்கும் தனது சரீரத்திற்குள் இருக்கும் புருஷனைக்குறித்து "அஹம்" "அயம்" என்று இரண்டு விதம் பிரயோகம் ஏற்படுகிறது. அதில் அஹம் என்ற சப்தத்திற்கு பிம்பபூதமான ஆத்மாவே விஷயமாகும். அயம் என்ற சப்தத் திற்கு சிதாபாஸனே விஷயமாகும். ஒரு ராஜாவினிடத்திலோ அல் லது ஈசுவரனிடத்திலோ தன்னை ரக்ஷிக்க வேண்டும் என்று பிரார்த் திக்கிற காலத்தில் தன்னையே அயம் என்ற சப்தத்தால், "இவனை யும் ஒரு பக்தனாய் சேர்த்துக் கொள்ளவேண்டும். "இந்த ஜீவனை யும் ரக்ஷிக்கவேண்டும்" என்று பிரார்த்திக்கிறான். அயம் அஹம் என்ற சப்தம் வெவ்வேறானதினால், அர்த்த பேதம் இருந்தால்தான்

சப்தபேதம் வரும் என்ற நியாயத்தை அனுசரித்து அயம் என்ற பதத்துக்கு ஜீவனும் அஹம் என்ற பதத்திற்கு ஆத்மாவும் அர்த்தமென்று சொல்லவேண்டும்.

இந்த ஆத்மாத்தான் பத்தாவதான வஸ்து. அன்னம் முதல் சிதாபாஸன் வரை 9-வஸ்துக்களும் கல்பிதமான காரணத்தால், பொய்யாகிறது என்றதை அனுசரித்து அந்த 9-வஸ்துக்களையும் சொல்லுவதில் தாத்பர்யம் இல்லாமல் 10வதான ஆத்மாவாகிய பிரம்மத்தைத்தான் வேதத்திற்கு சொல்லுவதில் பரமதாத்பர்யமானதினால், 10வதான வஸ்துவில் மனோரதத்தோடுங் கூடினது என்ற அர்த்தத்தை விளக்கும்பொழுது வேதமே தசரதர் என்றது வெளியாகிறது. இதை அனுசரித்துத்தான் வேதாந்தங்களிலும் தசம திருஷ்டாந்தத்தால் ஆத்ம தத்வமானது போதிக்கப்படுகிறது.

திருஷ்டாந்தத்தில் பத்து பேர்களுக்குள் அவனவன் தன்னை மறந்து மற்றவர்களை மாத்திரம் எண்ணி ஒன்பது பேர்கள்தான் இருக்கிறார்கள் என்ற மித்யாஞானத்தை அடைந்தார்கள். தானே பத்தாவது புருஷனாக இருக்கும்பொழுதே தான் ஒன்பது பேர்களுக்குள் உள்பட்டவன்தான், என்ற விபரீத ஞானத்தால், தன்னைக் காட்டிலும் பத்தாவது புருஷன் வேறு என்ற துரெண்ணம் ஏற்பட்டு பத்தாவது புருஷனைத்தேட ஆரம்பிக்கிறான். அவ்விதம் இருக்கும்பொழுது ஒரு சத்திய சந்தனான புருஷன் எதிரில் வந்து இவனை "என் பரிதபிக்கிறாய்? யாரை தேடுகிறாய்?" என்று கேட்க அவனும் நாங்கள் 10-பேர்கள் வந்தோம். அதில் ஒருவனைக்காணோம் அவனைத்தேடுகிறேன் என்று சொல்ல, எதிர்கொண்டு வந்த அந்த புருஷனும் மற்றொருதரம் எண்ணு, பார்க்கலாம் என்று சொல்ல, அவன் தன்னைவிட்டு எண்ணினான். அந்த ஆப்தபுருஷனும் நீயொருவன் இருக்கிறாய் என்று சொல்ல அவனுக்கு தான் ஒன்பது பேர்களுக்குள் ஒருவன் என்ற விபரீதஞானம் போக, தானே பத்தாவதானவன் என்ற திருடநிச்சயம் உண்டாய், பத்தாவது புருஷனைத் தேடுவதான யத்தனத்தை நிருத்திவிட்டு தான் தசமன் என்ற அனுபவத்தை அடைந்தான்.

(இன்னும் வரும்)

# விளம்பரம்.

---

இந்த புஸ்தகமானது ஒவ்வொரு மாதத்திலும் 60 பக்கத்திற்கு குறையாமல் சஞ்சிகையாக மதுரை அத்வைத சபையின் ஆதரவின் கீழ் வெளியாகிவருகிறது. வேதாந்த சாஸ்திரங்களை அவலம்பித்து 30 பக்கங்களும் ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சங்காராசார்ய ஸ்வாமிகள் அவர்களின் சரித்திரத்தை அவலம்பித்து 10 பக்கங்களும் வர்ணாச்ரம தர்மத்தை அவலம்பித்து 10 பக்கங்களும் ஸ்ரீ ராமாயணத்தை அவலம்பித்து 10 பக்கங்களும் இவ்விதம் நாலு பாகமாகப் பிரித்து அதின் தத்வார்த்தங்களை இந்த புஸ்தகத்தால் வெளியாக்கப்படும்.

| | | |
|---|---|---|
| வருஷ சந்தா | ... ... | ரூ. 3—0—0 |
| அரை வருஷத்திற்கு | ... | ரூ. 2—0—0 |
| தனிப்பிரதிக்கு | ... | ரூ. 0—8—0 |

---



விலாசம்:—

ராஜேந்திர பத்தினம் தேதியூர்

**சுப்பிரமணிய சாஸ்திரிகள்,**

நிர். 33, வடக்குச் சித்திரை வீதி,

மதுரை.